# முல்லை

ஆசிரியர்: கண்ணதாசன்.

இந்த இதழில்



அப்பாதுரையார்
சிந்தாமணி, பி. ஏ.
துரை. மாணிக்கம்
சிவ. குமாரசாமி
நாக. முத்தையா
தமிழ்வாணன்
தமிழ்ப்பித்தன்
கண்ணதாசன்

மற்றும்

பலர் எழுதியுள்ளனர்.



# வாழ்வும் தாழ்வும்

– துரை. மாணிக்கம் –

விண்ணை அளந்திடும் வித்தகர்-தொலை
வெங்கதிர் தோற்ற முணர்ந்தவர்-இந்த
மண்ணை அழித்திடக் கற்றவர்-வான
மாவெளி ஊர்ந்திடும் மேதையர்-பொருள்
வண்ண மறிந்தவர், மக்களின்-உயிர்
மாய்தலை வெல்ல முயல்பவர்-என
எண்ணத் தொலைவிலர் தோன்றினும்-மன
ஏற்றத்தில் யாவரும் தாழ்கின்றார்!

ஊர்ந்தவர் வானில் பறக்கின்றார்-விலங்
கொத்தவர் நல்லுடை சேர்க்கின்றார்-மடஞ்
சேர்ந்தவர் யாவரும் கற்கின்றார்-பிணி
சோர்ந்தவர் நோயினை வெல்கின்றார்-பணி
நேர்ந்தவர் இவ்வுல குய்யவே-உயிர்த்
தேவைகள் காண்பவர் ஆயினும் கடல்
ஆர்ந்த உலகினில் எங்கணும்-மக்கள்
அன்பிலும், பண்பிலும் தாழ்கின்றார்!

சேற்றைக் குழப்பிக் குடில்களைப்-பண்டு
செய்துயிர் வாழ்ந்த வழியினர்-விண்
காற்றை அளைப்பவர் போலவே-பல
கட்டுகின் றார்மனை வாழவே!—சுனை
ஊற்றுகள் தேடிக் குடித்தவர்-குழல்
ஊன்றிநீ ரோட்டங் கொணர்கின்றார்-பல
மாற்றங்கள் காண்கின்றார் ஆயினும்-உள
மாண்பினில் யாவரும் தாழ்கின்றார்!

'அன்பின் விளைநிலம்' ஆருயிர்-தரும்
ஆக்கம்' எனத்தகும் பெண்டிரும்-பெருந்
தென்புகள் கொண்டனர் போல்வராய்-உளத்
தூய்மையை, மென்மையை நீக்கியே-பல
வன்பணி யாற்றப் புகுந்தனர்-அன்பின்
வாழ்விடந் தூர்த்தனர்! ஐயகோ!-உள
அன்பினி தெங்ஙனம் வாழ்ந்திடும்?-மன
ஆற்றலில் யாவரும் தாழ்ந்திடின்!

வெற்றலை காக்கினும் ஆக்கலாம்!-வான
வெளியினை வீழ்த்தினும் வீழ்த்தலாம்-உயிர்க்
கூற்றுக் குறையினும் ஊதலாம்!-கடற்
கொள்புனல் வற்றினும் ஊற்றலாம்!-மலர்
தோற்றத்தைச் செய்யினும் செய்யலாம்!-அதில்
சீலினைக் கூட்டிடல் ஆகுமோ?-(அறிவு)
ஆற்றல்மிகப் பெரு மாட்சியே!-அன்
பாற்ற லிலாவிடில் வீழ்ச்சியே!

ஜெ

துறை, நிலை, முறைமை கண்டு
சொல்வன துணிந்து சொல்வோம்

# எண்ணம்

மலர் 1  வைகாசி  இதழ் 5

## இந்த இதழ்...!

இந்த இதழ் முல்லை சிறப்பாக இருக்கிறது என்பதை ஒப்புக்கொள்வீர்கள்.

இதழின் சிறப்புக்கு பன்மொழிப் புலவரின் 'இல்லறமே பேரின்பம்' என்ற கட்டுரை முடியமைத்திருக்கிறது. மற்றவர்களது எழுத்தோவியங்களும் சிறப்பாக அமைந்திருக்கின்றன.

நண்பர் தமிழ்வாணன் முதல் முறையாக எழுதியிருக்கிறார். சுவைபட அமைந்திருக்கிறது.

இந்த இதழில் இன்னொரு சிறப்பிருக்கிறது, பொது உடைமைத் தந்தை கார்ல் மார்க்சின் கொள்கைகள் தென்னாட்டுக்கு எங்கெந்த வகைகளில் பொருந்தும் என்பதை இளம் எழுத்தாளர் ஒருவர் ஆராய்ந்திருக்கிறார். 'கார்ல் மார்க்சும் கழகமும்' என்ற தலைப்பில் அந்தக் கட்டுரை இடம் பெற்றிருக்கிறது. மற்றும் பாரதியும் பாரதிதாசனும்-உள்ளே இருக்கிறார்கள். அத்தனையும் நீங்கள் விரும்பியவையே!






உண்மையான பொது உடைமைக் கட்சி ஒன்று தென்னாட்டிலே இருக்கிறது என்று சொன்னால் அது திராவிட முன்னேற்றக் கழகம் தான் என்று கூறினால் அது மிகையாகாது. நாட்டின் முன்னேற்றத்திலே அக்கறை கொண்ட எல்லா நல்லறிவாளர்களும், மனித இனத்திடத்தே பற்றும் பாசமும் கொண்ட எல்லா ஊழியர்களும் இதை மறுக்கமாட்டார்கள். ஆனால் பொதுவுடமைத் தத்துவத்தை கொண்டு வயிற்றை வளர்த்து வருகின்ற ஒரு சிலர் மட்டும் ஒத்துக் கொள்ள மாட்டார்கள். மாறாக, கண்டனக் கணைகளைத் தொடுப்பார்கள், நரகல் நடையிலே திட்டுவார்கள்.

பேரறிஞர் கார்ல் மார்க்ஸ், சிந்தித்து உலகம் உய்ய பாட்டாளி மக்கள் நல்வாழ்வு பெற ஒரு சிறந்த தத்துவத்தை உலகுக்கு அளித்துள்ளார். உற்பத்தி சாதனங்களும் இன்ன பிற சொத்துக்களும் சமுதாயத்துக்கு பொதுவானதாக ஆக்கப்பட வேண்டும் என்ற கருத்துடைய பொதுவுடைமை தத்துவத்தை உலகெங்கும் பரப்பினார்.

இன்று மார்க்ஸ்க்கு ஏற்பட்டுள்ள ஒரே ஆபத்து அவரது தத்துவங்கள் கம்யூனிஸ்ட்களால் தனியுடைமை ஆக்கப்படுவதுதான். பொதுவுடைமை தத்துவத்தை தனியுடைமை ஆக்கப் பார்க்கும் கம்யூனிஸ்டுகளின் செய்கையைக் கண்டு சிரிப்பதா? அழுவதா? என்று தெரியவில்லை.

நாம் ஏதோ மார்க்ஸினுடைய கொள்கைகளுக்கு எதிரிடையாகப் பிரசாரம் செய்வதாக எண்ணிக் கொண்டு நம் மீது பாய்கிறார்கள். உண்மையாகச் சொல்லப்போனால் நாம் தான் மார்க்ஸினுடைய கொள்கைகளுக்கு உண்மையான விளம்பரம் கொடுத்து பரப்புகிறோம். ஆனால் நமது கம்யூனிஸ்ட் காம்ரேடுகளோ, தங்களது குருநாதர் என்று எவரைப் பறை சாற்றுகிறார்களோ, எவரைப் பின் பற்றுவதாகத் தம்பட்ட மடிக்கிறார்களோ, அவரது கொள்கைகளைப் பின்பற்றுவதுமில்லை, பரப்புவதுமில்லை மாறாக, மறைமுகமாக எதிர்ப் பிரசாரம்கூட செய்து வருகிறார்கள்.

கார்ல் மார்க்ஸ் அவர்களுடைய தத்துவங்களும் போதனைகளும் மார்க்ஸிஸம் என்ற பெயரால் அழைக்கப்படுகின்றன. அவற்றை நான்கு பெரும் பகுதிகளாகப் பிரிக்கலாம். 1. பொருள் முதல் வாதம் 2. தர்க்கவியல் 3. வரலாறு பற்றிய பொருள் முதல் வாதக்

கண்ணோட்டம் 4. வர்க்கப்போராட்டம்-இவற்றை ஒன்றன் பின் ஒன்ருக ஆராய்வோம்.

## 1. பொருள் முதல் வாதம்

உலகத்தினுடைய தோற்றம், வளர்ச்சி, மனித குலத்தின் தோற்றம் வளர்ச்சி, முதலியனவற்றைப் பற்றிய கருத்துக்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். 1. கற்பனு வாதம் 2. பொருள் முதல் வாதம். கற்பனுவாதம் மதத்தை அடிப்படையாகக் கொண்டது. பொருள் முதல் வாதம் அறிவியலை அடிப்படையாகக் கொண்டது.

மதம், உலகமும் மக்களும் ஒரு ஆண்டவனுல் படைக்கப்பட்டன என்று கூறுகிறது. பொருள் முதல் வாதம், ஒரு சக்தி முதலில்தோன்றி உலகத்தையும் அதிலுள்ள பொருள்களையும், உயிரினங்களையும் படைத்திருக்க முடியாது என்றும், பொருள்களே முதலில் தோன்றியிருக்க வேண்டும் என்றும், அவற்றின் பௌதிக, ரசாயண மாற்றங்களின் காரணமாக உயிரினங்களும் உணர்வும் தோன்றியிருக்க வேண்டும் என்றும் கூறுகிறது.

அரசு முதலியன கடவுளால் படைக்கப்பட்டன என்று மதம் கூறுகிறது. பொருள்களை அடிப்படையாகக்கொண்டே எல்லாம் தோன்றின என்று பொருள்முதல் வாதம் கூறுகிறது. உலகமும், அதிலே உள்ள பொருள்களும், மனித மூளையால் பிரதிபலிக்கப்படுவதுதான் சிந்தனை அல்லது எண்ணம் என்று பொருள் முதல் வாதம் கூறுகிறது.

அவனன்றி ஓரணுவும் அசையாது. எண்ணமும், மனச் சாட்சியும் இறைவனுல்தான் படைக்கப்பட்டன என்று கற்பனு வாதிகள் கூறுகின்றனர். இவைகள் மனித மூளையிலிருந்து உற்பத்தியாகின்றன. மனித மூளை அதனுடைய சுற்றுச் சார்புகளுக்கேற்ப தானுகவே வளர்கிறது. மனித மூளையின் உற்பத்திகளும் இயற்கையின் உற்பத்திகளே என்று பொருள் முதல் வாதிகள் கூறுகின்றனர்.

கற்பனு வாதிகள் எண்ணத்தின் விளைவே பொருள்கள் என்கின்றனர். பொருள்களிலிருந்துதான் எண்ணம் பிறக்கிறது என்பது பொருள் முதல் வாதிகளின் கூற்று.

இதுதான் பொருள் முதல்வாதத்தின் சுருக்கம். இதிலே மார்க்ஸ் மதம், கடவுள், இவற்றைச் சாடுகிருர். மதங்கள் யாவும் சூதுமதி படைத்தவர்களால் உருவாக்கப்பட்டன என்கிருர். மதம், கடவுள் இவையெல்லாம் புனிதமானவையல்ல என்று கூறுகிருர். புராணங்கள் இதிகாசங்கள் முதலியன மாற்றத் தகாதவை, அவற்றை சிந்தனை உலைக் கூடத்திலே போடக்கூடாது என்று கூறும் போலி சமவாதிகளை சாடுகிருர். மதம்மக்களுக்கு அபின் போன்றது என்று கூறி மதத்தை ஒழிக்க முயலுகிருர்.

திராவிட முன்னேற்றக் கழகம் மேற்கண்ட கொள்கைகளுக்காக அல்லும் பகலும் போராடி வந்திருக்கிறது. இனிமேலும் போராடும். மதம் முன்னேற்றத்தின் முட்டுக்கட்டை, அறியாமை அந்தகாரத்திலே மக்களை அமுக்கும் தன்மை வாய்ந்தது. மத மூட நம்பிக்கைகள் ஒழிந்து மக்கள் மனவளம் பெற வேண்டும். அப்படியானுல் தான் மறுமலர்ச்சிப் பூங்கா செழித்து வளரும்; அதை விடுத்து சமய வாதிகளும் இன்ன பிறரும் மாசுபோல மறுமலர்ச்சிப் பூங்காவிலே நுழைந்தால் மக்களாட்சி நிலைக்காது. பொதுவுடைமை தழைக்காது. முதலிலே அறிவொளி, அதையொட்டி அரசியல் பொருளாதார ஒளி, என்று கூறி சமுதாய சீர்திருத்தத்திற்கு பாடுபடுகிறது.

ஆனுல் மார்க்ஸின் தொண்டரடிபொடி ஆழ்வார்கள் என்று கூறிக் கொண்டு தமிழகத்திலே, திராவிடத்திலே உலவுகிறகம்யூனிஸ்டுகள் என்ன செய்கிருர்கள்? நமது அருமைத் தோழர் ஜீவானந்தம் என்ன செய்கிருர். மதம்மக்களுக்கு அபின்

போன்றது என்று கூறி அதைச் சாடுகிறாரா? புராண இதிகாசங்கள் சூது நிறைந்தவை என்று கூறி தாக்குகிறாரா? மதங்கள் நாட்டிலே நால்வகைச் சாதியை உருவாக்கி மக்களிடத்திலே ஏற்றத் தாழ்வுகளை உருவாக்குகின்றன என்று கூறி அவற்றை அழிக்கப்பாடுபடுகிறாரா?

இல்லை, ஒருக்காலும் இல்லை. மாறாக கம்பராமாயண பஜனை செய்கிறார். அதன் மூலமாக இந்து மதத் உயர்வுக்காக பாடுபடுகிறார். மதம் அபின் போன்றது என்கிறார் மார்க்ஸ், இல்லை இல்லை பஞ்சாமிர்தம் என்கிறார் ஜீவா. இதிகாசங்கள் சூது. மக்களிடத்தே ஏற்றத்தாழ்வுகளை, ஏற்படுத்துகிறது என்கிறார் மார்க்ஸ். இல்லை, இல்லை கம்பராமாயணத்திலேதான் பொதுவுடைமையைக் காண முடிகிறது என்கிறார் ஜீவா. உலகம், மக்கள், அறிவு எல்லாம் தானாகவே வளர்கின்றன, ஒரு சக்தியால் படைக்கப் படவில்லை என்கிறார் மார்க்ஸ். இல்லை, ராமச்சந்திரசாமியால்தான் எல்லாருமே படைக்கப்பட்டன; என்கிறார் தோழர் ஜீவா.

இப்பொழுது கூறுங்கள் உண்மையான பொதுவுடமைத் கட்சி எது? பெயரைமட்டும் வைத்துக்கொண்டு போலி வாதங்கள் பேசுகின்ற கம்யூனிஸ்ட்களா? அல்லது கல்லடி சொல்லடி இவற்றை பொருட்படுத்தாது மார்க்ஸின் கொள்கைகளை பரப்புகின்ற திராவிட முன்னேற்றக் கழகத்தினரா?

## 2. தர்க்கவியல்

இந்தப் பகுதியிலும்மார்க்ஸ்தான் முன்னர் சொன்னவற்றை நன்கு வலியுறுத்துகிறார். பொருள்களைப் பற்றிய உண்மைகளை கண்டுபிடிப்பதுதான் தர்க்கவியல். அதை விடுத்து வெறும் கற்பனையிலே மேலுலகம் கீழுலகம் இவை பற்றியும் மோட்சம் நரகம் பற்றியும் வாதிப்பது தர்க்கவியல் அல்ல. உண்மையை உணர்த்துவதுதான் தர்க்கவியல் என்று மார்க்ஸ் கூறுகிறார். தர்க்கவியலை அறிவியல் அடிப்படையில் நடத்திச் செல்கிறார் மார்க்ஸ்.

உலகம் என்பது இறைவனால் ஏற்கனவே செய்து வைக்கப்பட்ட பொருள்களின் தொகுதியல்ல, பல விதமான வளர்ச்சிகளின் தொகுதியே அது என்கிறார் மார்க்ஸ், உலகிலுள்ள எந்தப் பொருளும் எண்ணம் உள்ள, நிலையானதோ புனிதமானதோ, மாற்றமடையாததோ அல்ல, ஒவ்வொன்றும் இடையறாத மாற்றத்தை வளர்ச்சியை அடைந்துகொண்டே இருக்கின்றன. பொருள்கள் தோன்றுகின்றன, வளர்கின்றன மறைகின்றன. இதுதான் இயற்கை. இந்த இயற்கை வளர்ச்சி மனித மூளையில் எவ்வாறு பிரதிபலிக்கப்படுகிறதோ, அதுதான் தர்க்கவியல்.

மனித அறிவு எவ்வாறு அறியாமையிலிருந்து அறிவுடைமையை நோக்கி வரலாற்றுப் பூர்வமாக உணர்ந்து வந்திருக்கிறது என்ற தத்துவங்களை உள்ளடக்கியதுதான் தர்க்கவியல், மார்க்ஸ் வாதித்த தர்க்கவியல் இதுதான்.

ஆனால் நமது கம்யூனிஸ்ட்டுகளோ இன்னும் ராமாயண காலத்திற்கே செல்ல விரும்புகிறார்கள். அறிவியல்தான் உலகத்தை முன்னேற்றத்தக்கது என்று கூறுகிறார் மார்க்ஸ். இல்லை, கற்பனைகளும் மத மூட நம்பிக்கைகளும் நிறைந்த புராணக் கதைகளும், ராமாயணமும், பாரதமும் இன்ன பிறவற்றை நாட்டிலே புகுத்தி மக்களை நால் வகை வருணங்களாகப் பிரித்து உயர்வு தாழ்வு கற்பிக்கும் கம்பராமாயணந்தான் உலகம் உய்ய வழி வகுக்கும் என்கிறார் ஜீவா. உலகத்தில் எந்த ஒரு பொருளும் மாற்றமடையாதது அல்ல, ஒவ்வொன்றும் எண்ணம் உள்பட வளர்ச்சி யடைந்து கொண்டே இருக்கிறது என்கிறார் மார்க்ஸ். ஆனால் தோழர் ஜீவா அவர்களோ எண்ண வளர்ச்சி, கருத்துவளர்ச்சி இவை யெல்லாம் கம்பராமாயண

காலத்தோடு முடிவடைந்து விட்டது. இனி அறிவியல் துறையிலே வளர்ச்சியில்லை கம்பராமாயணமே பொதுவுடைமையின் சாரம், அறிவியலின் எல்லை என்று கதைக்கிருர்.

இவர்கள் நம்மைப் பார்த்து பிற்போக்கு சக்தி என்று கேலி புரிகிருர்கள். பாவம். இவர்கள் இருப்பதோ அறிவுச் சூன்ய காலம், மக்களுக்கு அறிவொளியூட்டி மறுமலர்ச்சி யுலகுக்கு மக்களை அழைத்துச் செல்லும் நம்மைப் பார்த்து பிற்போக்கு சக்திகள் என்று கூறுகிருர்கள். ஈயத்தைப் பார்த்து சிரித்ததாம் பித்தளை என்பார்களே அது நமதருமை காம்ரேடுகளைப் பொருத்தமட்டில் நூற்றுக்கு நூறு உண்மையாகிவிட்டது. இதிலிருந்து நாம் தெரிந்து கொள்ளலாம். உண்மையான பொதுவுடைமைக் கட்சி தி. மு. கவினரே தவிர, அந்தர் பல்டியடிக்கும் கம்யூனிஸ்டகள் அல்ல என்பதை.

### 3. வரலாறு பற்றிய பொருள் முதல்வாதக் கண்ணேட்டம்

பொருளிலிருந்து உணர்வு தோன்றியது என்று கூறினுர். அப்படியானுல் சமுதாய அமைப்பிலிருந்துதான் சமுதாய மனப்பான்மையும் தோன்றுகிறது. மார்க்ஸ் சமுதாய வரலாற்றை இந்த ரீதியில் மாற்றியமைத்தார். கம்யூனிஸ்டகளுக்கும் நமக்கும் உள்ள மிகப் பெரிய வேறுபாடு இங்கேதான் தீர்க்கப்படுகிறது. கம்யூனிஸ்டுகள் முதலிலே பொருளாதாரப் புரட்சி ஏற்பட வேண்டும், பின்னர் சமுதாயத்தை எளிதாக திருத்திவிட முடியும் என்கிருர்கள். நாம் கூறுகிருேம்; முதலிலே மக்கள் மனவளம் பெற்று சமுதாயம் திருத்தப்பட்டால்தான் பொதுவுடைமை, மக்கள் ஆட்சி முதலியவை நிலைக்கும்: இல்லையானுல் முதலாளித்துவ ஆட்சியே சிறந்தது என்ற எண்ணம் சீக்கிரம் ஏற்பட்டுவிடும். மக்கள் தங்கள் உரிமைகளைக் காப்பாற்றிக் கொள்ள பயிற்றுவிக்கப்பட வேண்டும். இவ்விடத்தில் மார்க்ஸின் கூற்று நமது கருத்தை நன்கு வலியுறுத்துகிறது.

"மனிதர்களின் மனப்பான்மை அவர்களின் வாழ்க்கை யமைப்பை உண்டாக்கவில்லை. அதற்குமாருக அவர்களுடைய சமுதாயவாழ்க்கை அமைப்புதான் மனப்பான்மையை உருவாக்குகிறது."

நாம் பொதுவுடைமை சமுதாயம் நிறுவ வேண்டும் என்று கருதுவதால் அந்த சமுதாயத்தை உருவாக்கிவிட முடியாது. சமுதாய வாழ்க்கையமைப்பு அதற்கு ஏற்றதாக இருக்க வேண்டும். மக்கள் பிறப்பால் உயர்வு தாழ்வு கற்பிக்கும் மதத்திலே பற்று கொண்டவர்களாக இருந்தால் சமத்துவம் நிலவ முடியாது. விதி முதலிய மூட நம்பிக்கைகளில் மக்கள் நம்பிக்கை வைத்திருந்தால் சமத்துவம் நிலை பெற முடியாது. ஆகவே முதலிலே ஏற்றத் தாழ்வுகளற்ற சமுதாய வாழ்க்கையை உருவாக்கவேண்டும். பின்னர் நமது எண்ணத்துக்கேற்ப வாழ்க்கை முறையிலே வரும். இங்கும் நாம்தான் உண்மையான பொதுவுடைமை வாதிகளாகத் திகழ்கிருேம்.

"நாம் எந்தத் தொழிலை விரும்புகிருேமோ, எதில் நமக்குத் தகுதி இருக்கிறதென்று கருகிருேமோ அந்தத் தொழிலை அடைய முடியாமலே போகலாம். ஏனென்ருல் நாம் இந்த சமுதாயத்தோடு எத்தகைய உறவு இருக்க வேண்டும் என்று தீர்மானிப்பதற்கு முன்பே அந்த உறவு உருவாகியிருக்கிறது!'

இதிலிருந்து நாம் திருத்தவேண்டியது சமுதாயத்தையே என்பது தெற்றென விளங்கும்: நாம் விரும்பத் தொழிலையும், நமது தகுதிக்கும் திறமைக்கும் ஏற்ப தேடிக்கொள்ளும் வாய்ப்பை நல்கும் ஒரு சமுதாயத்தை உருவாக்குவதுதான் நமது குறிக்கோளாக இருக்கவேண்டும் என்பதே மார்க்ஸின் கருத்து.

"மனித சமுதாயம் தனதுதேவைகளை தானே உற்பத்தி செய்து

கொள்ள வேண்டிய நிலையிலிருக்கிறது. உற்பத்தி முறைகளுக்கு தகுந்தபடி மனிதர்கள் ஒருவகை சமுதாய உறவு முறைக்கு ஆளாகிறார்கள். உற்பத்தி உறவாகிறது. இந்த அடிப்படைமேல்தான் சட்டம் அரசியல் போன்றவை அமைக்கப் படுகின்றன. இவற்றோடு பொருந்தியே சமுதாய மனப்பான்மை உருவாகிறது. உற்பத்தி சாதனங்களின் ஒரு குறிப்பிட்ட வளர்ச்சிக் கட்டம் சமுதாயத்தில் ஏற்கனவே இருந்த சொத்துடைமை உறவுகளோடு முரண்பாடடைகிறது. இந்த முரண்பாடு சமுதாய முன்னேற்றத்திற்கு தடையாக வந்து நிற்கிறது. அப்பொழுது சமுதாயப் புரட்சிசகாப்தம் ஆரம்பமாகிறது. பின்னர் பொருளாதார அடிப்படை மாற்றம் ஏற்படுகிறது. பின்னர் அதன் மேல் கட்டம் முழுதும் தீவிரமான மாற்றமடைகிறது" என்று சரித்திரத்தை அமைக்கிறார். மார்க்ஸ் சமுதாய புரட்சியை ஏனைய புரட்சிகளுக்கு முன்னதாக வைத்திருப்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது.

மார்க்ஸ்க்கு முந்திய சரித்திரம் வெறும் சம்பவக் கோவையாக இருந்தது. மாறுபட்ட சமுதாய சக்திகளின் லட்சியங்களை விளக்க சமுதாயத்தின் வேறுபட்ட வர்க்கங்களின் வாழ்க்கை, உற்பத்தி நிலைமைகளை சரியாகக் கனித்து, கற்பனையான எண்ணங்களையும், சித்தாந்தங்களையும் புறக்கணித்து எல்லாவிதமான எண்ணங்களுக்கும் மூலம் சமுதாய உறவுகளின் நிலைமையிலேயும், உற்பத்தி உறவிலேயும் இருக்கிறதென்பதை தெளிவுபடுத்திற்று.

இந்த முறையிலேதான் நாமும் ஆரிய திராவிட இனங்களின் லட்சியங்களை விளக்கி, ஆரியர் வருகைக்கு முந்திய நமது பொருளாதார சமூக வாழ்க்கையை சரியானபடி சித்தரித்து, பின்னர் இரண்டு இனத்துக்கு ஏற்பட்ட போராட்டத்தின் விளைவை விளக்கி நமது வரலாற்றை கணிக்கிறோம். அதிலிருந்து நாம் நமது வாழ்க்கையின் கீழ் நிலைக்கு காரணம், ஆரியம் என்பதை உணருகிறோம். அதை ஒழித்து புது வாழ்வு காண வழி தேடுகிறோம். ஆகவே நாம் மார்க்ஸுடன் வேறுபடவில்லை. ஆனால் அருமைக் காம்ரேடுகளோ இங்கே மார்ஸிடமிருந்து வெகு தூரம் சென்று விடுகிறார்கள். இதிலிருந்து சமுதாயப் புரட்சி, பின்னர் அரசியல் பொருளாதாரப் புரட்சி இவற்றுக்குப் பாடுபடும் தி. மு. கவினர்தான் உண்மையான பொதுவுடைமைக் கட்சியே தவிர, போலி வேதாந்தம் பேசி, தொழிலாளர்கள் கூலி உயர்வுப் பிரச்சினையையே பெரிதாக்கி அவர்களை சுரண்டி வாழுகிற கம்யூனிஸ்டுகள் அல்ல என்பதை உணர முடியும்.

## 4. வர்க்கப் போராட்டம்

சிலரின் நலன்கள், பலரின் நலன்களோடு எந்த சமுதாயத்திலே முரண்படுகிறதோ அந்தச் சமுதாயம் முரண்பாடுகள் உடையதாய், தனக்குள்ளே போராட்டங்கள் நடப்பவையாய், புரட்சியும் பிற்போக்கும் அமைதியும், யுத்தமும் தேக்கமும், முன்னேற்றமும் நிரம்பியதாய் இருக்கிறது. ஆகவே ஒரு சமுதாயத்திலுள்ள எல்லா நபர்களின் நலன்களையும் கற்றுணர்ந்து விஞ்ஞான பூர்வமான முடிவுக்கு வரவேண்டும். நபர்களுடையவும் வர்க்கங்களுடையவும் வாழ்க்கையிலுள்ள வேறுபாடுகள், அந்தஸ்துகள், இவையே வர்க்கப் போராட்டத்திற்கு காரணங்கள்.

உயர்ந்த குலத்தான்–தாழ்ந்த குலத்தான், முதலாளி தொழிலாளி பணக்காரன்–ஏழை, ஆண்டான்–அடிமை, இந்த வேறுபாடுகள் போராட்டங்களுக்கு வேரூன்றுகின்றன. முடிவு இந்த வர்க்கங்கள் அழிக்கப்பட்டு வேறு புதிய வர்க்கங்கள் தோன்றுகின்றன. "இதுவரை எழுதப்பட்டுள்ள சரித்திரம் முழுவதுமே வர்க்கப் போராட்டங்களின் சரித்திரமாகும்" என்று மார்க் கம்யூனிஸ்ட் அறிக்கையிலே குறிப்பிடுகிறார்.

நாமும் இதைத்தான் பின்பற்றுகிறோம். ஆரிய வர்க்கம் இன்று இந்த நாட்டிலே உழைக்காமல் தின்று வாழ்கிறது. அந்தஸ்து அதிகாரம் இவைகள் யாவும் அந்தச் சிறு இனத்திடம் தேங்கியிருக்கிறது. சுமார் மூன்று சதவிகிதமே உள்ள அவர்கள் தொண்ணூற்றி ஏழு சதவிகிதத்தினரை அடக்கி ஆளுகின்றனர். இந்த நிலை மறைய வேண்டும். சுதந்திரம், சமத்துவம் முதலியன நிலவ வேண்டும் என்பதற்காக நாம் பாடுபடுகிறோம்.

ஆனால் நமதருமை கம்யூனிஸ்ட் நண்பர்களோ இவற்றையெல்லாம் காற்றிலே விட்டுவிட்டு சம்பள உயர்வுப் பிரச்சினையையே முக்கியமாகக் கொண்டு காலத்தை வீணாக்குகின்றனர்.

மேற்கூறியவற்றால் தென்னகத்திலே உண்மையான ஒரு பொதுவுடமைக் கட்சி இருக்கிறது என்றால் அது திராவிட முன்னேற்றக் கழகம்தான் என்பது விளங்கும். பொதுவுடைமைக் கட்சி என்ற பெயரோடு இருப்பவர்கள் அனைவரும் போலிகள்என்பதும், தங்கள் குருநாதரையே தூக்கிலிடும் குணம் கொண்டோர் என்பதும் தெற்றென விளங்கும்.

நம்மைப் பார்த்து பிற்போக்குவாதிகள் என்று இவர்கள் கூறுவதற்கு இன்னொரு காரணமும் உண்டு. நாம் அமைதி வழியிலே நம்பிக்கையுடையவர்கள். மார்க்ஸ் போராட்டம் என்று குறிப்பிடுவதையெல்லாம் இவர்கள் 'பலாத்காரம்' என்றே விளக்கம் தருகிறார்கள். இங்கே அவர்கள் ஒரு மாபெரும் தவறு செய்து விடுகிறார்கள். தம் நண்பன் ஒருவனுக்கு எழுதிய கடிதத்தில் மார்க்ஸ் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

"சுதந்திரத்திற்காக என்று சொல்லிக் கொண்டு பல்லை இளிப்பது, கெஞ்சிக் கூத்தாடுவது, **மிருக பலத்தைக் கையாள்வது**, குதர்க்கம் செய்வது, கீழ்த்தரமாகப் பணிந்துபோவது, இப்படிப்பட்ட வேலைகளைச் செய்வது, மகாகேவலம்."

மார்க்ஸ் பலாத்காரத்திலே நம்பிக்கை யுடையவரல்ல என்பது இதிலிருந்து விளங்கும். அவர் போராட்டம் என்று குறிப்பதை ஒரு சிலர் தவறாகப் புரிந்து கொண்டதே, அவர்களின், கொலை, கொள்ளைப் பட்டியல் நீண்டதற்குக் காரணம். இதற்கு மார்க்ஸ் பொறுப்பாளியல்ல. மேற்கூறியவற்றால் திராவிட முன்னேற்றக் கழகத்தவர்தான் உண்மையான பொதுவுடைமைவாதிகள் என்பதுவிளங்கும். கம்யூனிஸ்டுகள் எவரை தங்கள் குருநாதர் என்று தம்பட்டம் அடிக்கிறார்களோ, அவருடைய போதனைகளை இம்மியும் பிசகாமல் பின்பற்றுவதாகப் பிதற்றித் திரிகிறார்களோ அவரை அவர்கள் சரியாகப் புரிந்து கொள்ளவுமில்லை, பின்பற்றவுமில்லை. மாறாக அவர்கள் அவருடைய கொள்கைகளுக்கு, போதனைகளுக்கு எதிரிடையான செயல்களிலே ஈடுபடுகிறார்கள். அதோடு மட்டுமல்லாமல், நாட்டிலே உண்மையான பொதுவுடைமையைப் பரப்பிவரும் தி. மு. க. வினரைப் பார்த்து பிற்போக்குவாதிகள் என்று; பிதற்றித் திரிகிறார்கள். கண்டனக் கணைகளை வீசுகிறார்கள். நரகல் நடையில் ஏசுகிறார்கள். அழிந்து போவார்கள் என்று ஆருடம் கணிக்கிறார்கள்.

இவர்களது போலிவேடத்தை மக்கள் உணர ஆரம்பித்து விட்டார்கள். முடிவு, முன்னேற்றக் கழகத்திற்கு ஆதரவு பெருகுகிறது. கம்யூனிஸ்டுகள் கரைகிறார்கள். தி. மு. க. வின் வளர்ச்சி அவர்களுக்கு கிலியைத்தருகிறது. அதன் காரணமாக பித்தம் தலைக்கேறி, பயம் என்ற ஜுரம் கொண்டு உளறுகிறார்கள். பாவம்! வாழ்க அவர்கள் பிதற்றல்! அழிக அவர்கள் போலி வேடம்! என்று வாழ்த்துவதைத் தவிர நாம் ஏதும் செய்ய முடியாத நிலையில் இருக்கிறோம்.

**—சிவகுமாரசாமி,**

# பெண் மொழிகள்!

ஆணுக்கு உலகமெலாம் வீடு. பெண்ணுக்கு வீடுதான் உலகம்.

—காண்டேகர்.

கணவன் வழுவாத காதல் உடையவன் என்பது மனைவியின் முகமலர்ச்சியில் விளங்கும்!

—கதே.

ஆணின் பலம் புஜத்திலிருக்கிறது. பெண்ணின் பலம் நாக்கிலிருக்கிறது.

—கலிபோர்னியப் பழமொழி.

காதல் கடிதம் எழுதுகிற பேர்வழி இளைத்துப்போவதும் அதைப் பெறுகிற பேர்வழி கனத்துப் போவதும் இயல்பு.

—யாரோ.

இந்த நாகரீக உலகின் சிறப்பு பெண்கள் தங்களுடைய வயதை மறைத்துக்கொள்ளும் அழகுச் சாதனங்களை சிருஷ்டித்ததே!

—கேய் ஜான்.

நம்மில் பலர் அசடுகளாக இருக்கிறோம். பெண்கள் அசடுகளைத்தான் அதிகம் விரும்புவார்கள். சுயமரியாதை உள்ள எந்தப் பெண்ணும் புத்திசாலியான கணவனை அடைய விரும்பமாட்டாள். கணவனை அடக்கி ஆளவேண்டும் என்ற எண்ணம் பெண்களுக்கு இயற்கையாக உள்ள குணமாகும்.

—மர்தேக்கர்.

மனிதனுக்குத் தாய் போய்விட்டால் அறுசுவை உணவு போய் விடும். தந்தை போய்விட்டால் கல்வியறிவுக்குரிய வாய்ப்புப்போய் விடும். குழந்தை போய்விட்டால் வாரிசுக்குரிய செல்வம் போய் விடும். உடன்பிறந்தவர் போய்விட்டால் துணைபலம் போய்விடும். ஆனால் பொன்தாலியணிந்த மனைவி போய்விட்டாலோ இவை யனைத்துமே ஒன்றாகப் போய்விடும்.

—ஔவையார்.

ஒரு பெண்ணினால் தன் வாழ்க்கையை சந்தோஷமயமாக்கவோ துக்ககரமாக்கவோ முடியுமென நினைக்கிறவன் வாலிபன்; பெண்ணினால் தன் வாழ்க்கையை சந்தோஷமாக்க முடியும், துக்ககரமாக்க முடியாது என நினைக்கிறவன் மத்திய வயதுடையவன்; பெண்ணினால் தன் வாழ்வில் சந்தோஷமோ துக்கமோ புகுத்தமுடியாது என நினைப்பவன் கிழவன்.

—ஷா.

# ஜனவரி முதல் டிசம்பர் வரை

★ ஆங்கில மாதங்களுக்குப் பெயர் பிறந்தவிதம் கூறும் இந்தக் கதை, சிலஇடங்களில் இந்நாட்டுப் புராணங்களையும் மிஞ்சி விடுகிறது. ★

உரோமர் கடவுள் பக்தி மிகுந்தவர்களாக இருந்தார்கள். அது மட்டுமன்றி பெரியோர்களைக் கனம் பண்ணியும், அதிசயமான பொருட்களிலும் பிராணிகளிலும் அன்பும் தாட்சணியமும் காட்டியும் வந்தார்கள். பண்டைக் காலத்தில் இருந்த உரோமருக்கு தற்காலத்தவர்களைப் போல பெரியோர்களின் சிலைகளைச் செய்வதில் அவ்வளவாக ஊக்கம் வரவில்லை. அவ்விதம் செய்தாலும் அது தங்கள் நாட்டோடு நின்று விடுமே, உலகெங்கும் தங்கள் கடவுள்கள், பெரியார்களின் பெயர்கள் நிலைபெற்றிருக்க உதவாதே என்று கருதி அவர்கள் அவற்றையெல்லாம் மாதங்களுக்குச் சூட்டினர். அவர்களது அந்தப் பெயர்களே இன்றும் மாறியும் மாறாமலும் ஆங்கில மாதங்களின் பெயர்களாக வழங்கி வருகின்றன.

## ஜனவரி

இந்துக்கள் எத்தொழிலைச் செய்யினும் முதலில் கணபதியை (விநாயகர்) வணங்குதல் போல, உரோமரும் 'ஜானஸ்' என்ற தெய்வத்தையே முதற் தெய்வமாகக் கருதினர்கள். அவர்கள் இந்துக்களைப் போல எக்காரியத்தைச் செய்யினும் அத்தெய்வத்திடம் விடை பெற்றுக் கொண்டே செய்யத் தொடங்குவார்கள். இத்தெய்வத்திற்கு முன்பக்கத்திலும் பின்பக்கத்திலும் ஒவ்வொரு தலையாக இரு தலைகள் இருந்தன. ஒரு கையும் இருந்தது. ஒரு திறவுகோல் இருந்தது அக்கையிலே. இத்தெய்வமே உலகத்தைக் காப்பதென்றும் தங்களையும் இத்தெய்வமே காப்பாற்றுகின்றதென்றும், இத்தெய்வத்திடம் விடை பெற்றால் நினைத்த காரியங்கள் சித்தியடையும் என்றும் எண்ணினர்கள் உரோமர்கள். ஆகையால் இவ்விருதலைத் தெய்வமாகிய 'ஜானஸ்' என்ற தெய்வத்தின் நாமத்தை முதல் மாதத்திற்கு அமைத்தார்கள். 'ஜானஸ்' என்ற மாதமே, நாட்கள் உருண்டோடியபின் 'ஜனவரி'யாகியது. ஜனவரி ஒவ்வொரு வருடத் தொடக்கத்தில், முன் ஆண்டில் நடந்ததைச் சிந்தித்து, பின் தொடங்கும் ஆண்டில் நடக்க இருக்கும் காரியங்களை எண்ணி, காரியங்களைத் துணிபுறச் செய்யவேண்டும் என்று சிந்தனை செய்கிறது.

## பெப்ரவரி

"உலூப்பெக்ஸ்" என்ற கடவுளை உரோமர் இரண்டாவது தெய்வமாக வழிபட்டார்கள். இந்துக்கள் ஆடிவேல் விழாவைச் சிறப்பாகச் செய்வதுபோல, உரோமரும்

இத்தெய்வத்தை நோக்கிச் சிறப்பாகத் திருவிழாக்கள் செய்தார்கள். இத்திருவிழாவுக்கு "பெப்ருவா" என்று பெயர் இட்டார்கள். அவ்விழாவின் நாமத்தை ஞாபகத்தில் வைத்திருப்பதற்காக 'பெப்ரவரி' என்று இரண்டாவது மாதத்திற்குப் பெயரிடலாயினர். இவ்விழா அழுக்கை அகற்றி செம்மை செய்யும் என்று கருதினார்கள் உரோமர்கள்.

### மார்ச்

மூன்றாவதாக 'மார்க்ஸ்' என்ற இறைவனையே வணங்கலாயினர். பாலசுப்பிரமணியர் இந்துக்களுக்குப் போர்க் கடவுளாக இருந்தது போல மார்க்ஸ் உரோமரின் போர்க் கடவுளாக இருந்தார். இத்தெய்வம் ஒரு பெரிய ஈட்டியை சுழற்றிக்கொண்டும் இரும்பாலான ஒரு தண்டாயுதத்தைத் தூக்கிக் கொண்டும், பெரிய காப்பு ஒன்று அணிந்து கொண்டும், பார்ப்பவர்களின் மனங்களைப் பயம் அடையக் காணப்படும். உரோம் இத்தெய்வம் மிக வலிமையுடையதென்று நம்பி, இதனுடைய இடத்திலே மிருகங்களையும், பறவைகளையும் பலியிடுவார்கள். போர்வீரர்கள் போருக்குப் போகுமுன் கோழிகளைக் கூண்டில் அடைத்து, அக்கூண்டைத் தம்மோடு கொண்டு செல்வார்கள். போர் தொடங்குமுன் கூண்டுள் தானியங்களைத் தூவி உற்றுநோக்குவார்கள். அத்தானியங்களைக் கோழிக்குஞ்சுகள் அருந்தினால், போர்க் கடவுள் தங்களுக்கு அருள் அருளினார் என்றும், தங்களுக்கு வெற்றிச் சின்னம் என்றும் அக்கோழிகள் அத்தானியங்களை அருந்திவிட்டால் தங்களுக்கு மேலே கூறியவற்றுள் எல்லாம் எதிர் மாறானதென்றும் எண்ணினார்கள். 'மார்க்ஸ்' என்ற போர்க் கடவுளின் பெயரை நிலைநாட்டுவதற்காக மூன்றாம் மாதத்திற்கு மார்ச் என்று பெயரிட்டார்கள்.

> பிரான்சில் தொழிலாளி ஒருவருக்கு, தனது இருதயம் வேலை செய்யும் விதத்தைப் பார்க்க வேண்டும் என்ற விபரீத ஆசை ஏற்பட்டுவிட்டது. உடனே கத்தியை எடுத்தார். தனது வயிற்றின் இடதுபுறத்திலே வெட்டிக் கொண்டு இருதயத்தைப் பார்க்கத் துடித்திருக்கிறார். அவரது விஞ்ஞான ஆராய்ச்சி, அவரது விலாவில் ஆழமான காயத்தை ஏற்படுத்தி விட்டது. உயிருக்கு ஆபத்து இல்லை என்று மருத்துவர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

### ஏப்ரல்

நான்காவது மாதம் 'ஏப்ரல்'. இம்மாதம் மேலே கூறிய மூன்று மாதங்களைப் போலத் தோன்றியதல்ல. அவைகளுக்கு வேறுபாடானது. இளவேனில் தொடங்கும் காலம் இம்மாதமே. உதிர்ந்த இலைகள் தழைக்கின்றன. மலர்கள் மலர்கின்றன. மரங்கள் செழிப்படைகின்றன. எங்கும் பச்சைப் பசேலென கண்ணைக் கவரும் காட்சிகள் களிப்படையச் செய்கின்றன. இம்மாதத்தில் இக்காட்சிகளைக் காணலுற்ற மக்கள் மனம் மகிழ்கின்றது. இக்காட்சிகளைக் கண்டானந்தித்த உரோமர் 'ஓம்னியா' 'ஏப்பிரிட்' என்று கூறலாயினர். 'ஏப்பிரிட்' என்ற சொல் உரோமர் பாஷையில் தொடக்கம் என்ற பொருளைக் குறிக்கும். ஆகையால் இம்மாதம் 'ஏப்பிரில்' என்று பெயர் பெற்றது.

### மே

ஐந்தாவது மாதம் 'மே' என்பது. இப்பெயர் 'மேயா' என்ற ஒரு பெண் தெய்வத்தின் பெயர். இந்துக்களின் கல்விக் கடவுள் கலைவாணியாகிய சரஸ்வதியே. இதே போல உரோமருக்கும் கல்விக் கடவுளாகத் திகழ்ந்தாள் 'மேயா.' 'மேயா' 'அட்லாஸ்' என்ற தெய்

வத்தின் மகள். தங்களின் கல்விக் கடவுளின் பெயர் அழியாவண்ணம் இம்மாதத்திற்கு 'மே' என்று பெயர் பொறிக்கலாயினர் உரோமர்கள்.

## ஜூன்

ஆருவது மாதம் 'ஜூன்' என்பது. இது 'ஜூனோ' என்ற பெண் தெய்வத்தின் பெயர். இத்தெய்வத்தை அவர்கள் இரத்தினம் திரவியம்போலத் தங்கள் இதயத்திலே எந்நேரமும் நினைப்பார்கள். இம்மாதத்தின் பெயர் இத்தெய்வத்தின் பெயரிலிருந்து வந்தது என்பர் ஒரு சாரார். 'ஜூன்' என்ற மாதத்தின் பெயர் அப்பெண் தெய்வத்தால் அமையவில்லை என்றும் அது உரோமர் குடும்பத்தில் பிரபலமான 'ஜூனியஸ்' என்பவரின் பெயரே என்றும் கூறுவர் வேருேர் சாரார். 'ஜூனியஸ்' அடக்கமும் நல்லொழுக்கமும் இல்லாதவன். கொடுமை மிக உடையவன். ஆகையால் இவனின் பெயரை வைக்காது. பெண் தெய்வத்தின் பெயரே நன்றென்று எண்ணி, அப்பெயரையே இம்மாதத்திற்குப் பொருந்தும் என்று இட்டனர் என்று இன்னோர் சாரார் கூறுகிருர்கள்.

## ஜூலை

ஏழாவது மாதம் 'ஜூலை'. இம்மாதம் மேலே காணப்படும் ஆறு மாதங்களைப்போல்தோன்றியதல்ல. வித்தியாசமாக, எதிர்மாருகத் தோன்றியது. ஜூலியஸ் சீசரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களல்லவா? இவர் தமிழருக்குள் கட்டப்பொம்மன்போல உரோமருக்குள் 'ஜூலியஸ்சீசர்' பேரரசராக விளங்கினர். இம்மாதம் அப்பேரரசரின் நாமத்திலிருந்து தோன்றியது. முதன்முதல் இங்கிலாந்தின் மேல் படையெடுத்துச் சென்று, அங்கு வாழ்ந்தவர்களை யெல்லாம் வென்று, சரியான சட்டங்களை அங்கு ஆரம்பித்து ஆட்சி ஆண்ட பெரியார் இவரே. இவர் பெயரை

> 'நான் காதலிக்கும் அந்த வாலிபனுக்கு என்னைத் திருமணம் செய்யாவிடில் நான் அவனோடு ஓடிவிடுவேன்...' என்ருள் மகள்.
>
> தந்தை அமைதியாகச் சொன்னர்: கொஞ்சம் பொறு மகளே! அவன் யாரோடோ ஓடிப்போய் விட்டானென்று இன்றைய பத்திரிகையில் செய்தி வந்திருக்கிறது. அவனை எங்காவது விட்டுவிட்டுத் திரும்பி வரட்டும். பிறகு நீ போகலாம். ஏனென்ருல் ஒரே நேரத்தில் இரண்டு பெண்களை அழைத்துக்கொண்டு ஒருவன் ஓடமுடியாது...'

நினைவூட்டுவதற்காக 'ஜூலை' என்னும் மாதத்தை அமைத்தார்கள்.

## ஆகஸ்ட்

'ஆகஸ்ட்' மாதத்திற்குப் பழைமையான பெயர், 'வசக்ஸ்டிலிஸ்'. அக்காலத்தில் சீசருக்குப் பின் 'ஆகஸ்டஸ்' என்னும் நாமமுடைய அரசன் ஆட்சி செய்தான். அவன் பெயர் இம்மாதத்திற்குப் பொருந்துமென்று கருதி மாற்றினர்கள். மாற்றியதன் காரணம், சண்டை சச்சரவுகளை நீக்கி, செங்கோலாட்சி செய்தமையும், எகிப்து தேசத்தை வென்றமையுமாகும்.

## செப்டெம்பர்

உரோமரின் ஒன்பதாவது மாதத்திற்குச் 'செப்டெம்பர்' என்று பெயர். இம்மாதம் சமாதானத்தைக் குறிகோளாகக் கொண்ட ஒரு பெரியாரின் பெயரிலிருந்து தோன்றியது. இவரின் பெயர் 'செப்ரெம்பர்' "ஒற்றுமையே பலம்; ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு; அடம்பன் கொடியும் திரண்டால் மிடுக்கு" என்னும் முதியோர்களின் பழமொழியையே இவர் கைக்கொள்ளுபவர். பொறுமை, நீதி, சாந்தம் முதலியன உடையவர்

இவர். உரோமருள் சண்டை சச்சரவுகள் ஏற்பட்டால் அவைகளை அக்கணமே அகற்றும் வல்லுணர். இத்தகைய பெரியவர் ஒருவர் தங்கள் சமூகத்தில் இருப்பது தங்களுக்கு நல்லதென்று பெருமை கொண்டார்கள். ஆகையால் இத்தகைய பெரியாரின் பெயரையே ஞாபகத்தில் வைத்திருப்பதற்காக அவரின் பெயரையே அம்மாதத்திற்கு இட்டார்கள்.

## அக்டோபர்

'அக்டோபர்' என்பது பத்தாவது மாதம். இம்மாதம் தோன்றிய வழி, முன் கூறிய ஒன்பது மாதங்கள் தோன்றிய வழிகளைப் போலல்ல.

உரோமர் சில அற்புதங்களைக் கண்டனர். அவற்றுள் முதல் முதலாகக் கண்ட அற்புதம் ஒரு கடற் பிராணி. அதன் பெயர் 'ஒக்டோபஸ்' எனப்படும். இப்பிராணிக்கு நான்கு வர்ணங்கள் உண்டு. எட்டுக் கரங்கள் உண்டு. மனித முகம் உண்டு. அத்துடன் இது பறக்கும் சக்தியுமுடையது. ஆகவே தாங்கள் கண்ட அதிசயப் பொருட்களுள் மிகவும் வியப்புடையதும், முதன் முதலில் பார்த்ததுமான இந்த அதிசயப் பிராணியின் பெயரைச் சூட்டவேண்டும் என்று எண்ணி அப்பெயரையே வழங்கலாயினர்.

## நவம்பர்

இம்மாதம் தெய்வங்களின் பெயர்களிலிருந்தோ, அதிசயமான பிராணியின் பெயரிலிருந்தோ தோன்றவில்லை. இது ஒரு வலிமை உடையவன் பெயரினின்றே தோன்றியது. உரோமாபுரியில் ஒரு கிணறு இருந்ததாம். அக்கிணற்றண்டை எவராலும் போகமுடியாமலிருந்ததாம். காரணம் அக்கிணறு எந்நேரமும் தீச்சுவாலையை விட்டெறிந்து கொண்டிருக்குமாம். அதனால் அக்கிணற்றண்டை போகக் கூடியவன் 'நோவர்' எனப்படுவன் ஒருவன்தானும். இவன் திடகாத்திரமும் வலிமையும் உள்ளவன். இவனின் பெயரையும் ஒரு மாதத்துக்கு சூட்டினார்கள். அதுவே நவம்பர் மாதம்.

இரவு நேரம். எட்டு வயதுச் சிறுமி அறைக்குள்ளிருந்தாள். அப்போது அவள் தம்பி ஓடி வந்து கதவைத் தட்டினான்.

"நான் கதவைத் திறக்கமாட்டேன். நைட் கெவுன் (அங்கி) அணிந்திருக்கும்போது ஆடவர்கள் பார்க்கக்கூடாது என்று அம்மா சொன்னது உனக்கு நினைவில்லையா?" என்றாள் உள்ளிருந்தபடி அந்தச் சிறுமி.

சிறுவன் திரும்பிப் போயக் கொண்டிருந்தான். சில விநாடிகளுக்குப் பின் சிறுமி கதவைத் திறந்து வெளியில் வந்து தம்பியைக் கூவியழைத்தாள்.

"அம்மா கோபிக்கமாட்டார்களா" என்றான் தம்பி.

அதற்கு இவள் சொன்ன பதில்: அங்கி போட்டிருக்கும் போது தானே பார்க்கக்கூடாதென்றார்கள். நான் அகற்றிவிட்டேன்.

## டிசம்பர்

வருஷத்தின் கடைசி மாதம் டிசம்பர். ஒரு இந்திரஜாலக்காரனும், தந்திரஜாலக்காரனுமாகிய 'டிசெர்' என்று ஒருவன் இருந்தான். இவன் மக்களை இருவழிகளாலும் வெல்லும் தன்மை உள்ளவன். எக்காரியத்தை எடுத்தாலும் அக்காரியத்தில் வெற்றியே அன்றித் தோல்வி காண்பது அரிது. இவன் தங்கள் சமயத்தை உலகெங்கும் பரப்ப தூண்டுகோலாக நின்றவனாதலால் இவனின் பெயரை மிகவும் முக்கியமானதாகக் கருதி அதையும் மாதத்திற்குச் சூட்டினார்கள்.

— **சுதந்திரன்.**

# தமிழ்ப்பித்தன்



செடி மறைவிலே வரதனும் வள்ளியும் சிங்காரப் பண் பாடிக்கொண்டிருந்தார்கள். தங்களது எதிர்கால வாழ்க்கையைப் பற்றி அந்த இளம் உள்ளங்கள் ஏதோ மனக்கோட்டை கட்டிக் கொண்டிருந்தன. அருகிலுள்ள செடி கொடிகள் தென்றலின் கைபட்டு ஆடி மகிழ்வதைக்கூட அவர்கள் பார்க்கவில்லை. பறவைகள் பாட்டுப் பாடி மகிழ்ந்து




செல்வதைக்கூட அவர்கள் கவனிக்கவில்லை. அந்த நேரத்திலே பிரளயம் ஏற்பட்டிருந்தால் கூட அந்தக் காதல் ஜோடிக்குத் தெரிந்திருக்காது.

அடிக்கடி சந்தித்து வருகிறவர்கள், திடீரென்று சந்திக்க வாய்ப்பில்லாமல் தவித்து, பின்னர் மறுபடியும் அந்த வாய்ப்பைப் பெற்றுவிட்டால், அவர்கள் எவ்வளவு மகிழ்ச்சி கொள்வார்கள் என்பதை அவர்களைப் போன்ற காதல் ஜோடிகளைக் கேட்டுத்தான் நாம் தெரிந்துகொள்ள முடியும்.

★

வரதன் அந்த ஊர் நாட்டாண்மைக்காரரின் ஒரே மகன். தாயை இழந்தவன். நல்லவேளை! மாற்றாந்தாய் என்கின்ற ஒரு நெருப்பைச் சந்திக்க வேண்டிய சூழ்நிலை அவன் வாழ்க்கையில் ஏற்படவில்லை. வரதன் அதிகம் படித்தவன் இல்லை. ஆனாலும், நிறையப் படித்தவர்களுக்கு இருக்கின்றன அளவு நெஞ்சுரமும் நேர்மைத் திறமும் அவனுக்கு உண்டு. பகுத்தறிவாளர்களின் புத்தகங்களை அவன் விடாமல்படித்து வந்தான். அதன் பயன், சாதி சமயங்களிலே அவன் வைத்திருந்த நம்பிக்கைகள் தவிடுபொடியாயின. உயர்ந்த குலம் தாழ்ந்தகுலம் ஆகிய பேத முறைகள் அவனது இதயத்தை விட்டு அகன்று எங்கோ ஓடி ஒளிந்துவிட்டன. அவனது உள்ளம் பலவிதமான வெறிகளை எல்லாம் கடந்து சமதர்மபுரியை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. அதனால்தான் உள்ளூர் தாசியின் மகள் வள்ளியின் மேல்

அவன்எண்ணம் விழுந்திருந்தது. வள்ளியின்மேல் அவன் வைத்த அன்பு கணத்தில் அழிந்துவிடும் தன்மையுடையதல்ல. உயிருள்ள வரை உடன் இருந்து வாழச் செய்யும் உத்தமமான அன்பு! ஆம். அவன் வள்ளியைத் திருமணம் செய்து கொள்ளத்தான் எண்ணினான். இந்த விஷயத்தில் உறவினர்களையும் ஊர் மக்களையும் பற்றிய கவலை அவனுக்கு இல்லை. அவனைப் பொறுத்த வரையில் வள்ளிதான் அவனது உலகம். அந்த உலகத்தின் கருணையில்தான் தான் உயிர்வாழ்வதாக அவன் எண்ணினான். இந்த எண்ணத்துக்கு வள்ளி ஆரம்பகாலத்தில் இடம் கொடுக்கவில்லை. பெரிய மனிதர்களின் வீட்டுப் பிள்ளைகள் பலரைப் பற்றிய செய்தியை அவள் தன் தாயின் மூலம் தெரிந்து வைத்திருந்தாள். என்றாலும், நாட்டாண்மைக்காரர் மகன் தன்னை நட்டாற்றில் விட்டுவிடுவான் என்ற எண்ணம் அவளுக்கு எப்போதுமே தோன்றியதில்லை. ஆனால் அவனது உற்றார்கள் அவனை உருப்பட விடமாட்டார்களே என்றுதான் பயந்தாள். அவன் தனது சொத்து உரிமையைக்கூட இழக்க நேருமே என்று எண்ணித்தான் கலங்கினாள். இந்த எண்ணத்தால்தான் வரதனின் கொள்கைக்கு முதலில் தடையிட்டு வந்தாள். ஆனால், அந்த வரதன் வாழ்ந்து வந்த நிலை, வள்ளியை அவனது எண்ணத்துக்கு ஒப்புக்கொள்ளச் செய்தது. சதா அவன் பைத்தியக்காரனைப் போலத் திரிந்ததைப் பார்த்து, அவளது உள்ளத்தில் பரிவு தோன்றியது.

“உன்னைத் திருமணம் செய்து கொள்ள முடியாமல் போனால், நான் தற்கொலை செய்துகொள்வேன் வள்ளி” — இப்படி அவளிடம் சொல்லிவிட்டான். சொன்னதோடு நிறுத்தவில்லை. கண்ணீர் வடித்தான். ஒரு ஆண் கண்ணீர்விட்டுக் கதறும்போது ஒரு பெண் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கமுடியுமா? அதிலும் பெரிய மனிதர் வீட்டுப் பிள்ளை தனது காதலுக்காக ஏங்கி அழும்போது எப்படித்தான் அவள் கல்மனதுக்காரியாக இருக்கமுடியும்? அவன் ‘தற்கொலை செய்துகொள்வேன்’ என்று சொல்லிய வார்த்தைகள் அவள் காதிலேயே நின்றன. உறங்கிக்கொண்டிருக்கும்போது கூட அந்த வார்த்தைகள் அவள் நினைவில் தோன்றி, அவளை உசுப்பிவிடும். இதனால், வரதனிடம் அவனைக் காதலிப்பதாகவும் திருமணம் செய்துகொள்வதாகவும் ஒப்புக்கொண்டாள். அப்படி ஒப்புக்கொண்டிருந்தபோதும்கூட அவளது உள்ளம் சில சமயங்களில் இனந்தெரியாத குழப்பத்துக்கு ஆளாகும். அச்சத்துக்கும் அன்புக்கும் இடையே ஊஞ்சலாடிக்கொண்டிருந்தது அவளது பேதை நெஞ்சம், நெருப்பின்மேல் நின்று

---

“என்னப்பா! திடீர் விஜயம்?”

“நான் உன்னிடம் கொடுத்த குடையை வாங்கிப் போக வந்தேன்!”

“ஐயையோ! என் நண்பன் ஒருவனிடம் அதைக் கொடுத்திருக்கிறேனே! அது உனக்கு உடனடியாகத் தேவைப்படுகிறதா?”

“இல்லை! என்னிடம் அதைக் கொடுத்தவன் அதன் சொந்தக்காரன் கேட்பதாகச் சொன்னான்!”

கொண்டிருப்பது போன்ற உணர்வுதான் அவளுக்கு எப்போதும் இருந்து வந்தது.

வள்ளி பல நாட்களாக தன் தாயிடம்கூடத் தனது காதல் வரலாற்றைச் சொல்லியதில்லை. ஆனால் அவளது தாய் சுந்தர வடிவுக்குத் தன் மகளும் தொழிலில் ஈடுபடுவதில் விருப்பமில்லை தான். தன்னோடு தனது பரம்பரைக்கு இருந்துவந்த மாசு தொலைந்து போகவேண்டும் என்றுதான் அவள் விரும்பினாள். அத்துடன், தன் மகளுக்கு ஒரு நல்ல மாப்பிள்ளை கிடைத்து அவள் குடியும் குடித்தனமுமாக வாழ்வதைப் பார்க்கவேண்டும் என்பதில் கொள்ளை ஆசை அவளுக்கு. அதற்காக, தன் மகளுக்கு ஒரு பணக்காரன் மாப்பிள்ளையாக வரவேண்டும் என்று வடிவு நினைக்கவில்லை. பணம் ஒழுக்கக்கேட்டை வளர்த்துவிடும் என்பது அவளுக்குத் தெரியும். அதனால் தான், ஒழுங்காக குடும்ப வாழ்க்கை நடத்தும் ஒரு சாதாரண குமாஸ்தா கிடைத்தால்கூடப் போதும் என்று அந்த அம்மாள் எண்ணினாள்.

ஒருநாள்...வீட்டு வேலை எல்லாம் விரைவில் முடிந்தது. வடிவு ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தாள். வள்ளி வீட்டுக்குள் அங்கும் இங்கும் ஓடிக்கொண்டிருந்தாள். அவளது கால்கள் நாட்டியம் ஆடிக்கொண்டிருந்தன. கரங்கள் அபிநயம் பிடித்தன. அவளது உள்ளம் இன்பத் துள்ளலுக்கு இசை அமைத்துக் கொடுத்தது. சதங்கையில்லாமலேயே அவளது கால்கள் இனிய ஒலியை எழுப்புக்கொண்டிருந்தன. உள்ளத்தின் மகிழ்ச்சி ஒலி பாதத்தைத் தொட்டுப் பார்த்துக் கொண்டிருந்தது. அவள் மனம் எதையோ நினைத்தது. அவளது மெல்லிதழ்கள் எதையோ அவளது அன்னையிடம் சொல்லத் துடித்தன. மறுகணம் தன் இதழ்களுக்குத் தடையுத்தரவு போட்டுவிட்டாள் வள்ளி. திடீரென்று நிலைக்கண்ணாடியின் அருகில் சென்றாள். அவளது பருவ எழிலை எதிர் ஒளி செய்தது அந்தக் கண்ணாடி. அவளது சுறுசுறுப்பான தோற்றத்தை அப்படியே படம் பிடித்துக் காட்டியது அந்தக் கண்ணாடி. அவளது ஆனந்தத்தைக் கண்ட அவள் தாய் வடிவுக்கு ஒன்றுமே புரியவில்லை. தன் மகள் தலை கால் தெரியாமல் இருப்பதற்குக் காரணம் என்னவாயிருக்கும் என்று யோசித்தாள். யோசனை பயன் இல்லை. மேலும் தன் மூளையைக் குழப்பிக்கொள்ள அவளுக்குத் துணிவில்லை. என்றாலும் தன் மகளுடன் பேச ஆரம்பித்தாள்.

''வள்ளி! இப்படியே இருந்தா ஒன் அழகு எதுக்காகும்? சீக்கிரம் ஒனக்கு ஒரு கல்யாணத்

> ஒரு பண்ணையிலே 100 ஆண்களும், 2 பெண்களும் வேலைக்கு இருந்தனர்.
> பண்ணையின் நிர்வாகிக்கு உரிமையாளர், கடிதங்களை ரத்தினச் சுருக்கமாகவும், எண்ணிக்கைளை சரியாகவும் எழுதும்படி சொல்லியிருந்தார்.
> நிர்வாகியிடமிருந்து பண்ணையாருக்கு ஒரு கடிதம் வந்தது. ''சென்ற மாதம் நமது பண்ணையில் 2 சத விகிதம் ஆண்கள் 100 சத விகிதம் பெண்களை மணந்துகொண்டனர்.''

தைச் செய்துவைக்கலாம்னு நெனேக்கிறேன்'' என்றாள்.

"அம்மா! என் காதில் விழுவது உண்மைதானா? எங்கே, நீ, குலத்தொழிலைச் செய்யச் சொல்வாயோன்னு நெனச்சேன்! நல்லவேளே தப்பிச்சேன்! உன் இஷ்டப்படியே நான் கல்யாணம் செய்துக்கறேன் அம்மா! அதோட, மாப்பிள்ளையை நானே



தேடிக்கிட்டேன் அம்மா. உன்னிடம் நானே இன்னிக்குச் சொல்லனும்னு நெனெச்சேன். அதுக்குள்ளே நீயே பேச்சை ஆரம்பிச்சுட்டே அம்மா!'' என்று சொன்னாள் வள்ளி.

"மாப்பிள்ளே யார் வள்ளி?"- தாய் கேட்டாள்.

"நாட்டாண்மைக்காரர் மகன் வரதன் தான்'' - மகள் சொன்னாள்.

இதைக் கேட்டதும் வடிவு ஒரு கணம் அப்படியே கல்லாகச் சமைந்துவிட்டாள். அவளது இருதயமே நின்றுவிடுவதுபோல தெரிந்தது. முகமெல்லாம் வியர்த்தது. பேச நா எழவில்லை. நாட்டாண்மைக்காரரைப் பற்றி வடிவுக்கு நன்றாகத் தெரியும்! அவர் குடும்பம் ஊரிலே பெரிய குடும்பம் என்பதையும் அவள் அறிவாள். அத்துடன் முன்பொரு முறை அவர் ஒரு மாதிரியாக நடந்துகொண்டதை அவள் அதற்குள் மறந்துவிடவில்லை. அவரது மகனுக்கும் தனது மகளுக்கும்

மனம் வேண்டுமானால் பொருந்தலாம்; ஆனால் மணம் பொருந்தாது என்று எண்ணினாள். தன் தொண்டையைக் கனைத்துக் கொண்டாள். "அம்மா, வள்ளி! இந்த ஆசையை விட்டுவிடு! அந்த சம்பந்தம் நடக்காது! வீணா மனக்கோட்டை கட்டாதே அம்மா!'' என்று சொன்னாள். ஆனால், வள்ளி அதை ஏற்றுக் கொள்ளவில்லை. வரதனில் நல்ல

குணத்தைப் பற்றித் தன் தாயிடம் விளக்கமாகச் சொன்னுள். கடைசியில், பாவம், அந்தத் தாயுள்ளம் தன் மகளின் விருப்பத்தை ஆமோதித்துவிட்டது.

மறுநாள் திடீரென்று ஏதோ தந்தி வந்தது. வள்ளியும் வடிவும் வெளியூர் சென்றுவிட்டார்கள். வெளியூர் சென்ற வள்ளி, தன் தாயின் சம்மதத்தைத் தெரிவித்து வரதனுக்குக் கடிதம் எழுதினுள். கடிதம், உரியவருக்குக் கிடைக்காமல், உரியவரின் தந்தைக்குக் கிடைத்துவிட்டது. ஆமாம்! கடிதம் நாட்டாண்மைக்காரர் கையில் கிடைத்துவிட்டது. அவர் கடிதத்தைப் படித்தார். துடித்தார். மகனை அழைத்து மிரட்டினுர். நிறையப் படித்தவனும் கெடுகிருன், படியாதவனும் கெட்டுப்போகிருன் என்று முணங்கினுர். மகனுக்கு உபதேசம் செய்தார். வள்ளியை மறந்துவிடச் சொன்னுர். குடும்ப கவுரவம் என்ற வார்த்தையைப் பலதடவை அழுத்திக் கூறினுர். வரதன் அதற்குமேல் அவரது பேச்சைக் காது கொடுத்துக் கேட்கவில்லை. கண்திறந்து, அவரது முகத்தைக்கூடப் பார்க்கவில்லை. கண்களை மூடிக்கொண்டே அவரது எதிரில் நின்ருன். கிழவர் பயமுறுத்தினுர். வரதன் அஞ்சவில்லை.

"என் முடிவு அசைக்கமுடியாத முடிவு"-வரதன் சொன்னுன்.

"உன்னையே அசைத்துவிடுகிறேன் பார்!"-நாட்டாண்மைக்காரர் சீறினுர்.

"முடிந்ததைச் செய்யுங்கள்"-வரதன் பதில் சொன்னுன். பதிலைச் சொல்லிவிட்டு வேகவேகமாக வெளியே சென்ருன். தன் காதல் கதை தனது தந்தைக்கு எப்படித் தெரிந்தது என்ற விஷயம் அவனுக்குப் புரியவில்லை. மகனை மிரட்டிய நாட்டாண்மைக்காரர் வள்ளி எழுதிய கடிதத்தைப் பார்த்ததாகக் காட்டிக்கொள்ளவில்லை.

அவன் காலும் கருத்தும் ஓடோடின, வள்ளியைப் பார்ப்பதற்கு. ஆனுல் ஏமாற்றம்' வள்ளியின் வீடு பூட்டப்பட்டிருந்தது. அருகிலுள்ளவர்களை விசாரித்தான். வள்ளியும் அவள் தாயாரும் வெளியூர் சென்றிருப்பதைத் தெரிந்துகொண்டான். உள்ளம் உடைந்துபோய் வீட்டுக்குத் திரும்பினுன்.

வீட்டிலே ஏதோ பேச்சுச் சத்தம் அதிகமாகக் கேட்டது. கூடத்திலே நாட்டாண்மைக்காரர் யாரோ கருப்புக்கோட்டுக்காரர் ஒருவருடன் பேசிக்கொண்டிருந்தார். அந்தக் கருப்புக்கோட்டுக்காரர் வக்கீலாகத்தான் இருக்க வேண்டும் என்பதைத் தீர்மானிக்க வரதனுக்கு நெடுநேரம் ஆகவில்லை. அதோடு, சுய

---

புகழ்பெற்ற நடிகை ஒருத்தி 'பாஸ்போர்ட்டுக்கு' மனுச் செய்திருந்தாள். பல கேள்விகளைக் கேட்டுவிட்டுக் கடைசியில் விசாரணைக் கிளார்க் கேட்டான்:

'திருமணம் ஆகிவிட்டதா?...'

நடிகை நெடுநேரம் யோசித்தாள். கடைசியில் சொன்னுள்:

'இல்லை இல்லை. ஏனென்ருல் இன்னும் பத்திரிகைகளில் செய்தி வரவில்லை.'

சம்பாத்தியம், தர்மம், போன்ற சொற்கள் அடிபட்டன. வரதனுக்கு விஷயம் நன்ருகப் புரிந்துவிட்டது. தன் தந்தை சொத்து வகையருவைக் காட்டி தன்னை மிரட்ட எண்ணுகிருர் என்பதை அவன் சில கணத்தில் புரிந்துகொண்டான். அதுமுதல் வீட்டில் அவன் யாருடனும் பேசுவதில்லை. பைத்தியக்காரன் போலவே இருந்தான்.

வள்ளி தாசிப்பெண் என்பது மட்டுமல்ல நாட்டாண்மைக்காரர் சீறியதற்குக் காரணம். அவரது கண் சில நாட்களாக வள்ளியின் மேல் விழுந்திருந்தது. தனது தூதனைவிட்டு வள்ளியின் தாயிடம் கேட்டு, அவர் அடைந்த அவமானமும், அவர் மனதைச் சுட்டெரித்தது. என்றைக்காவது தனது எண்ணத்தை நிறைவேற்றிவிடத் துடித்துக்கொண்டிருந்தது அவரது தொய்ந்த உள்ளம். இந்த நிலையில் தன் மகனே அவளை அடைய எண்ணுகிருன் என்ருல், அவரது இதயம் அதை எப்படி ஒப்புக்கொள்ளும்? அதனுல்தான் இந்த விஷயத்தில் அவர் பிடிவாதம் செய்தார்.

வரதன், வீட்டிலேயே அடைபட்டுக் கிடந்தான். வெளியே செல்லக்கூட அவனுக்குப் பிடிக்கவில்லை. வள்ளி இல்லாத இடம் அவனுக்கு சூனியப் பிரதேசமாகத் தென்பட்டது. ஒரு வாரம் கழிந்தது. வள்ளி வந்துவிட்டதாக அவளது தூது வந்து சொல்லியது. அந்த மகிழ்ச்சியில் தான் தோட்டத்திற்கு ஓடோடி வந்தான். செடி மறைவிலே இருந்த வள்ளியைக் கண்டு அவளுடன் சிங்காரப் பண்பாடிக்கொண்டிருந்தான்.



ஏதோ காலடி ஓசை கேட்டு வரதனும் வள்ளியும் திரும்பினர்கள். யாரோ ஒருவர் அந்தப் பக்கம் சென்றுகொண்டிருந்தார். இருட்டிவிட்டதை உணர்ந்து இருவரும் பிரிந்தார்கள்.

வீட்டுக்குச் சென்ற வரதனுக்கு 'வார்த்தை வெகுமதி' நிறையக் கிடைத்தது. அவனது தந்தை இதுவரை அப்படித் திட்டியதில்லை. அன்று அளவுக்கு அதிகமாகவே திட்டிவிடடார். தன் மகன், தாசி மகளுடன் தோட்டத்தில் பேசிக்கொண்டிருந்ததை தனது கண்களாலேயே பார்த்துவிட்டதால்தான் அவரது கோபம் அதிகரித்தது. மகன் என்ற உறவு முறையையும் மறந்து அவர் திட்டினர்.

இரவு வந்தது. வரதன் தூங்கவில்லை. அவன் உள்ளம் நிம்மதியில்லாமல் தவித்துக்கொண்டிருந்தது. படுக்கையை விட்டு எழுந்து குறுக்கும் நெடுக்குமாக நடை போட்டுக் கொண்டிருந்தான். ஏதோ முடிவுக்கு வந்தவன்போல, திடீரென்று நின்ருன். அவன் கைகள் அந்த இருட்டில் எதையோ தேடின. அவன் தேடிய பொருள் அவன் கைக்

---

திருடியதாகக் குற்றம் சாட்டப்பட்ட ஒருவனுக்காக வாதாடி வென்ருர் ஒரு வழக்கறிஞர். அதுவே அவருடைய முதல் வழக்காகும். அவரைப் பாராட்டிய அவன் அவரை வீட்டில் வந்து பார்ப்பதாகச் சொன்னன்.

வழக்கறிஞர் சொன்னர்: 'அப்பா நீ வருவதானுல் பகல் வேளையிலேயே வா!'

குக் கிடைத்துவிட்டது. அவன் கால்கள் இப்போது அறைக் குள்ளே நடைபோடவில்லை. அறையைத் தாண்டி வெளி உலகில் நடைபோட்டன. திடீ ரென்று ஒரு இடத்தில் வந்து நின்றன. அது வள்ளியின் வீடு. அந்த வீட்டுக் கதவைத் தட்டி ஞன். வள்ளியே கதவைத் திறந்தாள். அவளும் தூக்க மின்றித் தான் தவித்துக்கொண் டிருந்தாள். அவளை வெளியே அழைத்தான் வரதன். அவளது காதிலே ஏதோ சொன்ஞன். அவளும் ஒப்புக்கொண்டது போலத் தலையசைத்தாள். தன் தாயை ஒருமுறை பார்த்துக் கொண்டாள். அடுத்த கணம் வரதனுடன் வெளியே நடந் தாள். அவர்கள் இருவரும் எங்கேயோ சென்றுகொண்டிருந் தார்கள் அந்த நள்ளிரவில்.

விடிந்துவிட்டது. வரதனைப் படுக்கையில் காணேம். உடனே நாட்டாண்மைக்காரருக்கு விஷ யம் புரிந்துவிட்டது. வள்ளியின் வீட்டுக்கு வந்தார். அங்கே வடிவு கண்ணீர்விட்டுக்கொண் டிருந்தாள். தன் மகள் போய் விட்ட ஏக்கம் அவள் உள்ளத் தைத் துளைத்தது. நாட்டாண் மைக்காரர் வந்த வழியைப் பார்த் துப் பேசாமல் திரும்பினர். அவரது மூளை குழம்பிப் போய் அங்கும் இங்கும் அலைந்தார். அவரது கால்கள் அவரைத் தோட்டத்துக்கு அழைத்துச் சென்றன. அங்கே கழுகுக் கூட்டம் ஓர் இடத்தில் வட்ட மிட்டுக்கொண்டிருந்தது. எட்டிப் பார்த்தார். அந்தக் காட்சியைக் கண்டதும் அவர் கண்கள் கண் ணீரைக் கொட்டின. காரணம், அங்கே, செடிமறைவிலே வரத னும் வள்ளியும் உலகத்தை மறந்து கிடந்தார்கள். ★

---

மாடியிலிருந்து தாயின் குரல் கேட்டது: 'அன்புள்ள மகளே! அந்த அழகிய வீணையை எடுத்து வந்து என் முன் வாசித் துக் காட்டு.'

மகள் சொன்னள்:

'இதோ ஒரு நிமிடத்தில் வந்துவிடுகிறேன் அம்மா!'

பதினைந்து நிமிடம் கழிந்தது.

திரும்பவும் தாயின் குரல் கேட்டது:

'என் அறிவுள்ள மகளே! நூற்றுக்கணக்கான பணம் போட்டு வாங்கிய அந்த அற்புத வீணையை எடுத்து வந்து என் முன் பாடிக் காட்டு...'

மகள் கீழிருந்து பேசினள்:

'இதோ வந்துவிடுகிறேன் ஒரு நிமிஷத்தில்...'

பத்து நிமிடம் கழிந்தது. தாய் மேலிருந்து கூச்சலிட்டாள்:

'அட சனியன் பிடித்தவளே! அந்த இழவெடுத்த வீணையை அழுது தொலைக்கிருயா இல்லை அதைக் கொண்டு வந்தே உன் தலையில் போட்டு உடைக்கவா...?'



# பூவும் வண்டும் !

ரோஜாச் செடி ஒரு மொட்டைப் பெற்றெடுத்தது. அதோடு அதன் அழகை எண்ணி எண்ணிப் பூரித்தும் போயிற்று. மொட்டு விரிந்து மலரானால் தன் விருப்பம்போல் அதனை ஆட்டி வைக்க வேண்டும் என்ற எண்ணம் அப்பொழுதே அதன் இதயத்தில் இடம் பெற்றுவிட்டது.

ஒரு நாள் மாலை. மறுநாள் காலை மலரும் பருவம் வந்து விட்டதால், நன்றாகப் பருத்துத் தனி அழகோடு நின்றது மொட்டு. அதன் கவர்ச்சி அந்த வழியாகச் சென்று கொண்டிருந்த ஒரு சின்னஞ் சிறு வண்டை ஈர்த்தது. அப்பொழுதுதான் காதலிக்கக் கற்றுக் கொண்ட வண்டு, மொட்டைச் சுற்றிச் சுற்றி வந்து அதன் மீது தன் அழகிய விழி வீச்சைத்தொடங்கியது. மொட்டு மறுக்கவில்லை. மின்னல்போன்ற எதிர் வெட்டு ஒன்றை விழியால் காட்டித் தன் உள்ளத்தைக் கண்ணாடி போட்டுக் காட்டியது. இரண்டும் சிறிது நேரத்தில் 'அவனும் அவளு'மாகி விட்டன.

வண்டு தன் இருப்பிடத்தை நோக்கிப் புறப்பட்ட போது, மொட்டை நோக்கி 'முத்தம் ஒன்று கொடு கண்ணே!' என்று கேட்டது.

ப. புகழேந்தி

'அவசரம் எதற்கு? நாளை காலை நான் என்னையே தருவேனே! புது வாழ்வு தொடங்கும் பொன்னாள் இல்லையா நாளை?' என்றது மொட்டு.

'நானும் நாளை சும்மாவா இருந்து விடப் போகிறேன்? இருந்தாலும் அச்சாரமாக இதைப் பெற்றுக் கொள்...' என்று மொட்டைக் கட்டி முத்தமிட்டுச் சென்றது வண்டு.

மொட்டும் வருத்தத்தோடு, ஆனால் முத்தம் பெற்ற முறுவலோடு வண்டை வழி அனுப்பி வைத்தது.

மொட்டால் அந்த ஒரு நிமிடத்தை மறக்கவே முடியவில்லை வண்டின் முத்தத்தால் தன் உதட்டில் ஏற்பட்டுவிட்ட எச்சிலைத் துடைக்கும் எண்ணம் கூட அதற்கு ஏற்படவில்லை. நாளை மலர்ந்ததும், மணாளனை அடைவோம் என்ற மகிழ்ச்சியில், இரவை எப்படியோ கழித்தது அது.

காலை வானம் வெளுக்கச் சிறிது நேரமே இருந்தது. கதிரவன் தன் ஒளிக் கிரணங்களைப் பரப்ப எண்ணி வெளிவரத் தயாராகிக்கொண்டிருந்தான்.

அரை குறையான இருட்டு இன்னும் அடங்க

வில்லை. மொட்டுபாதி மலர்ந்து ஆனால் முற்றிலும் மலராகி விடாமல் பருவப்பெண்போல நாணிக்கோணி நின்றது.

செடிக்கு அப்போது மலர் மொட்டாக இருந்த காலத்தில் ஏற்பட்ட நினைவு தலைதூக்கத் தொடங்கியது. புதிய எண்ணங்கள் அதன் மனத்தைச் சூழத் தொடங்கின. தனக்குத் தண்ணீர் விட்டு வளர்ப்பவள் வீட்டுக்காரப் பெண். ஏன் அவளுக்கு மலரைக் கொடுத்துவிடக் கூடாது...? இப்படி ஓடியது அதன் சிந்தனை.



வெளியூருக்குச் செல்வதற்காக விடியு முன்னரே எழுந்து விட்ட வீட்டுக்காரப் பெண்ணுக்கு தலை வாரிக்கொண்டிருக்கும் போது மலர் வைக்கும் நினைவு வந்தது. விரைவாகத் தோட்டத்திற்கு வந்து ரோஜா அருகில் குனிந்து பார்த்தாள் அவள். அங்கே அந்த ஒற்றை ரோஜா மலர் சிரித்துக்கொண்டிருந்தது. அதன் சிரிப்பை ரசித்தோ அல்லது கண்டித்தோ உருட்டி விழித்தது அவளது கூந்தல்.

செடி தனக்குள் சொல்லிக் கொண்டது: 'கூந்தலுக்குக்குறை என்ன இருக்கிறது? அலை அலையாகச் சுருண்டு கருமேகம்போல் காட்சியளிக்கிறதே! மலருக்கு ஏற்ற மணாளன் இதுதான்! மலரும் கூந்தலும் இணைந்து விட்டால் எவ்வளவு ஜோடிப் பொருத்தம்...!' மாப்பிள்ளை வீட்டாருக்குப் பெண்ணைக் காட்டுவது போல மலரைத் தூக்கி அது அழகு காட்டியது.

மலர் எண்ணிக்கொண்டது வீட்டுக்காரப் பெண் தண்ணீர் ஊற்றத்தான் வருகிறாள்போலும் என்று. இந்த நேரத்தில் எந்தக் காலத்தில் அவள் தண்ணீர் ஊற்றினாள் என்ற எண்ணம் கூட அதற்கு அப்பொழுது இல்லாமல் போய் விட்டது!

அவள் கையை மலரின் பக்கத்தில் கொண்டு போனாள். செடி மலரை அவள் கையருகே எட்டித் தள்ளியது. கூந்தல் தனக்குள்ளேயே 'அழகான மனைவி' என்று ஆனந்தப் படத்தொடங்கியது. அதுவரை இதைப் பற்றி அக்கரையே இல்லாமலிருந்து விட்ட மலர், திடுக்கிட்டுத் திரும்பியது. 'ஐயோ!' என்ற ஒப்பாரி அதனை அறியாமலே அதனிடமிருந்து வெளி வந்தது.

அவள் 'வெடுக்'கென மலரைப் பிடுங்கித் தன் கூந்தலில் சூடிக் கொண்டாள். மலர் தன் உள்ளம் உடைந்து விட்டது போல உணர்ந்தது. வெயிலில் வீசி எறியப்பட்ட மீன்போலத் துள்ளியது. கூந்தலோ தன் உரிமை மனைவியைஆசையோடு அணைத்தது. அந்த அணைப்பு வெந்த புண்ணில் வேல் சொருகுவது போன்ற வேதனையை மலருக்குத் தந்தது. மலர்

மெதுவாக நழுவத் தொடங்கியது. விட்டுவிடுவதற்கு அவளுக்குப் பைத்தியமா பிடித்திருக்கிறது! கூந்தலில் அழுத்தி வைத்ததோடு, கூடவே இரண்டு மூன்று தலை மயிரையும் சேர்த்துக் சட்டி வைத்தாள் அவள். அவளது அந்த அழுத்தம் மலரின் உடம்பையும் உள்ளத்தையும் ஒரு சேரத் தாக்கியது.

அவள் நடந்தாள். மலர் கூந்தலின் பிடியில் இருந்துகொண்டே அழுதபடி, தன் பிறந்த இடத்தை நோக்கியது. அங்கே அதன் காதலனை அந்தச் சின்னஞ்சிறு கருவண்டு, சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தது தெரிந்தது. ஏக்கம் பின் தொடர மலர் கூந்தலோடு சென்றது.

காற்று ஊதியது. மலர்க் கொத்து அசைந்தாடியது. கூந்தலுக்குச் சொந்தக்காரி பூங் கொத்து விழுந்துவிடாதபடி சரி செய்தாள். தொலைவிலே வட்டமிட்டுக் கொண்டிருந்த வண்டுக்கு, பறந்துபோய் அந்தச் சண்டாளியின் விரல்களிலே கொட்டிவிட்டு வரலாமா என்று தோன்றியது. கடுவிஷம் இல்லையே அதனிடம்! பாவம்! சுற்றிச் சுற்றி வேகமாக பறந்து விட்டு அயர்ந்து விழுந்தது.

களைப்பு தீர்ந்து ஏறிட்டுப் பார்க்கையில் கூந்தல்காரி மறையப் போவது வண்டுக்குத் தெரிந்தது. மலர்க்கொத்து புலப்படவில்லை.

ஏதாவது ஒரு மலரை மட்டும் வாழ்நாள் முழுதும் காதலிக்க வேண்டும் என்ற எண்ணத்திற்கு அன்றோடு முழுக்குப் போட்டுவிட்டு தினசரியும் புது மலர்களை நாடும் திட்டத்துடன் தன் வழி சென்றது வண்டு. ★

## தலைவர்களின் ஆசை!

காந்தி அடிகளுக்கு
இரண்டில் ஆசை :

**அகிம்சை**
**தீண்டாமை ஒழிப்பு**

நேருவுக்கு இரண்டில் ஆசை :

**வெளிநாட்டுப் பயணம்**
**உள்நாட்டுப் பதவி**

ஈ. வே. ராவுக்கு இரண்டில் ஆசை:

**வெண் தாடி**
**வீண் கலகம்**

அண்ணாவுக்கு இரண்டில் ஆசை :

**திராவிட நாடு**
**தமிழ் வளர்ச்சி**

பாரதியாருக்கு இரண்டில் ஆசை :

**மதுப் பொருட்கள்**
**தமிழ்க் கவிதைகள்**

ராஜாஜிக்கு இரண்டில் ஆசை :

**கருப்புக் கண்ணாடி**
**குழப்பச் செயல்கள்**

டி. கே. சி. க்கு இரண்டில் ஆசை :

**மீசை**
**கம்ப ராமாயணம்**

மா. பொ. சி.க்கு இரண்டில் ஆசை:

**மீசை**
**தமிழரசுக் கழகம்**

ஜீவானந்தத்துக்கு
இரண்டில் ஆசை :

**அபாயச் செயல்கள்**
**ஆகாசப் புளுகுகள்**

செட்டிநாட்டரசருக்கு
இரண்டில் ஆசை :

**பணம்**
**பதவி**

தங்கவயல் லோகிதாசன்

# இல்லறமே பேரின்பம்



‘ஒன்றே குலம், ஒருவனே தேவன்’ —இது தமிழர் நெறி. இக்கருத்தையே மனித உலகின் நாகரிக சமயங்கள் எல்லாம் அடிப்படையாகக் கொண்டு இயங்குகின்றன. ஆனால் ஒரு குலத்துக்கும் ஒரு தெய்வத்துக்கும் உள்ள தொடர்பை விளக்கி, ஒருமைக் கோட்பாட்டின் உச்ச உயர்முகடு கண்டுரைத்த உலக முதல்வர் திருவள்ளுவர் ஒருவரே!

‘ஒன்றே குலம்’—இது சங்ககாலத் தமிழர் கண்ட வாசகம். ஆனால் இது அவர்களுக்கு நீண்டநாள் முன்னரே — நூற்றுக்கணக்கான, ஒருவேளை ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னரே — வள்ளுவர் கண்ட ஒரு முழு மெய்மையின் ஓர் அரைகுறை நிழற்கோடு மட்டுமே. அவர்கண்ட அம்முழு மெய்மை குலம் ஒன்றே என்பதன்று, வாழ்க்கை ஒன்று, வாழ்குடி உலகு அதாவது மனித இனம் ஒன்று என்பதே. இதைக் கண்டவான் பேரறிஞருள் வள்ளுவர் முதல்வர். அது மட்டுமல்ல. அவர் கண்ட அளவிலும் முறையிலும் அதனை வேறு எவரும் காணவில்லை என்னலாம். ஏனெனில் வாழ்க்கை ஒன்று, இறைமை ஒன்று — இவற்றின் தொடர்புகண்டு இறைமைக்கு இலக்கணமும் உயிர் விளக்கமும் அளித்தவர் வள்ளுவர் ஒருவரே.

இயற்கை ஒன்று. ஒரு வழி நின்று முழு நிலைப்பட்ட அதன் அமைதியே (வள்ளுவர் மொழியில் தெய்வம், ஊழ்) அறம். இவ்வியற்கை வழி நின்று வளரும் உயிர் உலக, மன்பதை அமைதியே பொருள். இதனையே நாம் வாழ்க்கை என்கிறோம். இக்காலத்தவர் பெரும்பாலார் இதனைச் சமுதாய வாழ்க்கை, சமய வாழ்க்கை, அரசியல் வாழ்க்கை என வேறு வேறுபட்ட துறைகளாகக் கொள்வர். இத்துறைகளை வள்ளுவர் மதித்தாரானாலும், இவற்றின் அடிப்படை உணர்ந்து அதனையே வாழ்முதல் அதாவது பொருள் என்று கூறினார்.

இயற்கை, வாழ்க்கை ஆகிய இரண்டின்மூலமும் முடிவும் (முடிவுறு முடிவு அதாவது குறிக்கோளும்), உள்ளீடும் அவற்றை இயக்கும் உயிர்முதலும் பயனும் யாவும் இன்பமே. இயற்கை ஒன்றே, வாழ்க்கை ஒன்றே எனக் கொண்ட வள்ளுவர் இந்த இன்பமும் ஒன்றே எனக் கண்டு விளக்கினார். இந்த இன்பத்தையே அவர் ‘இறை’ என்றார்.

ஒன்றான இயற்கையமைதியின் அறமுதலும், ஒன்றான வாழ்க்கையமைதியின் பொருள் முதலும், ஒன்றான இன்ப முதலும் முழுநிறை வாழ்க்கைக் குறிக்கோளான, நாகரிகக் கனவிலக்கான இறைவனே. இதனால் இறைவன் முப்பால் முதல்வன் அல்லது முழு முதல்வன் ஆகிறான். இயற்கையின் தோற்றமும் வாழ்க்கையின் இயங்கு முதலும்

— பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரை M.A., L.T. —



இன்ப முடிவாகிய குறிக்கோளும் அவனேயாதலாலும், அம்முடிவே தோற்றமாகவும், தோற்றமே முடிவாகவும் இடையருது சுழலுதலாலும், வள்ளுவரும் அவர் வழிநின்ற சமய வாணரும் இறைவனை முப்பால் ஆழி (அறஆழி) இயக்கும் அந்தணன் என்றும், ஆதி அந்தம்இலாதவன் என்றும், அற (இயற்கை) வடிவினன், பொருள் (அறிவு) வடிவினன், இன்ப வடிவினன் என்றும் கூறியுள்ளனர். இவ் வாசகங்களை நாம் எங்கும் காணலாம் – அவற்றின் அறிவார்ந்த, கலைப்பண்பு வாய்ந்த வாழ்க்கை விளக்கத்தை வள்ளுவரிடத்தில் மட்டுமே நாடிப் பெறமுடியும்.



"உங்களைப் போல குண்டர்களாக இருப்பவர்கள் எல்லோருமே மிகவும் நல்லவர்களாகவே இருக்கிறார்கள் ! அது ஏன்"

"ஆமாம் ! எங்களால் ஓடவும் முடியாது ! சண்டை போடவும் முடியாது."

ஒன்றே அறம், ஒன்றே பொருள் (வாழ்க்கை), ஒன்றே இன்பம் (வாழ்பயன் வளம்), ஒன்றே இறை: அறத்தின் வழிபொருள், பொருள்வழி இன்பம், அம்மூன்றன் வழிஇறை. இதுவே வள்ளுவரின் வியத்தக்க தனிச்சிறப்பு வாய்ந்த வாழ்க்கை ஒருமைக் கோட்பாடு. இதை உணராதவர் வள்ளுவர் குறளின் சொற்களில் விளையாடும் கிளிப்பிள்ளைகள் – அவர் சொற்பொருளும் சொற்பொருளின் உயிர்ப்பொருளும் காணுதவரே யாவார்.

**அறம் ஒன்று, அதுவே இல்லறம்**
**'அறன் எனப்பட்டதே**
**இல்வாழ்க்கை'**

என்று வள்ளுவர் துணிந்துள்ளது கண்டும் இல்லறத்துக்கு மாருக ஒரு துறவறம் காண முனைந்துள்ளனர் இடைக்கால மாயச் சமய வாணர்.

சங்ககால ஔவையாருக்குப் பன்னூருண்டு பிற்பட—வள்ளுவருக்குப் பல்லாயிர ஆண்டு பிற்பட்ட—வாழ்ந்த அணிமைக்கால ஔவையார்கூட வள்ளுவப் பண்பின் அரை ஒளி நிழலில் நின்று 'இல்லறமல்லது நல்லறமன்று' என்று பாடியுள்ளது காணலாம். 12 அல்லது 16-ம் நூற்ருண்டு வரையிலாவது வள்ளுவர் உயர் குறிக்கோள் ஒரு சிலரிடமாவது மங்கி மங்கி மின்னொளி வீசிற்று என்பதை இது காட்டுகிறது.

இல்லறம் ஒன்றே அறம். அறம் ஒன்றே. அது மட்டுமன்று. அதனுல் வரும் இன்பமும் ஒன்றே.



வள்ளுவர் கொண்ட துறவறம் இல்லறத்துக்கு மாருனதோ, எதிரானதோ அன்று. அது இல்லத்தின் கனிந்த முதிர்வே, அதன் விரிவேயாகும். வீட்டெல்லையில் தொடங்கிய இல்லறம் சூழலில் விரிவுற்று, ஊர், சமுதாயம், நாடு, மொழி, இனம் என விரிவுறும் தோறும் அது பல படியான துறவறங்களாக உருக்கொள்கிறது. அவையும் இல்லற வகைகளேயாதலால்தான், வள்ளுவர் இல்லறத்துக்கும் பொதுவாகத் தந்த அதே உயர்வு சிறப்பைச் சிறப்பாகத் துறவறத்துக்கும் கூறினர்.

**'துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல் மற்றையவர்கள் தவம்'**

துறவோரின் தவவாழ்வை (தியாகப் பொதுத் தொண்டை) இங்கே வள்ளுவர் உயர்வுபடுத்தி, அது மேற்கொள்ளாதவரை மெல்ல நகையாடுகிருர். 'துறவோருக்கு இவ்வளவு புகழ் வருகிறதே, அப்புகழை வளர்ப்பதற்காகத்தான் மற்றவர்கள் அதே வழியைச் சற்று மறந்திருக்கிருர்கள் என்று கூற வேண்டும்' என்கிருர் அவர்.

இல்லறத்தார் பொதுவாகக் குடும்பம் என்று சிற்றெல்லையிலே பெறும் இன்பம் சிற்றின்பம். இடைக்காலத்தவரால் 'சிறு' என்ற சொல் இங்கே சிறுமை, கீழ்மை என்ற பொருளில் தவருகக் கொள்ளப் பட்டுள்ளது. காதல், காமம் என்ற மற்ற உயர்ந்த தமிழ்ப் பண்புகள் குறித்த சொற்களைப் போலவே தமிழர் அடிமையிருட் காலங்களில் இதுவும் இழிந்த அடிமைப் பொருள் குறித்துவிட்டது. உண்மையில் சிறிய யாழ், சிறிய இடை, சிறிய இடை என்ற இடங்களில் சிறுமை இழிவு குறிக்கவில்லை. இனிமை, நுண்ணயம், நுட்ப அழகு நலம் ஆகிய பண்புகளே குறித்தன. சிற்றின்பம் இப்பொருளே கொள்ள வல்லது. பேரின்பம் இதனைவிட எல்லைப் பரப்பில் பெரிது. ஆனல் நுண்ணயத்தில், ஆழத்தில், முழு நிறை நலத்தில் சிற்றின்பத்துக்குத் தனிச் சிறப்பு உண்டு. இதுபோல விரிவுற்ற இல்லறமாகிய துறவறம் பொது இல்லறத்திலும் விரிந்த எல்லையுடையதானுலும், முழுநிறை நலத்தில் அப்பொது இல்லறத்துக்கு ஈடாகாது. இஃதுணர்ந்தே வள்ளுவர் பொதுவான இல்லற துறவறங்களை அறத்துப்பாலில்



''ஏன் இந்த ரயில் நிலையத்தை ஊரை விட்டு வெகு தூரத்தில் கட்டியிருக்கிருர்கள்?''

''ரயில் பாதைக்குப் பக்கத்தில் ஸ்டேஷன் இருக்கவேண்டும் என்பதற்காக?''

வைத்து, அவற்றை இயற்கை நெறி அல்லது அறத்தின்பால் வைத்தார். பின் அவற்றின் கருவி நயங்களைப் பொருட்பாலில் விதந்தோதியபின், மீண்டும் பொது இல்லறத்தின் நுணுகிய ஆழ்ந்த காதற் சுவையிலேயே திளைக்க முற்பட்டார்.

பொதுவான இல்லறம்-இன்பம்! சிறப்பான துறவறம் - பேரின்பம்! ஆனால் இந்த இரண்டும் கடந்த சிறப்பான இல்லறம், காதலின் அகச்சுவை ததும்பும் காதலறம் ஆகும். அதுவே இன்பம், பேரின்பம் ஆகிய இரண்டு இன்பங்களும் கடந்த நீடின்பம். இந்த மூன்றும் இன்பமே வள்ளுவரின் மூன்றும் பாலும் முழுநிறை பாலுமாகிய இன்பப்பாலில் விளக்கப்படும் இன்பம் ஆகும். இது இல்லற இன்பம், துறவறப் பேரின்பம் ஆகிய இரண்டு புற இன்பங்களும் கடந்த அகஇன்பம் அகப்பேரின்பம் ஆகிய நீடின்ப வகைகள் ஆகும்.

வள்ளுவர் குறிக்கொண்ட இல்லறம், இன்பம் ஆகிய ஒருமைக் கோட்பாடுகளின் பண்புகள் நீண்ட காலமாகத் தமிழராலும் தமிழர் தாழ்வுற்ற காலை அவர்களை வந்தடுத்து அறவுரையும் அறிவுரையும் ஆன்மிகவுரையும் அளிக்க முற்பட்ட ஏனையோராலும் மறக்கப்பட்டுவிட்டன. ஆனால் இசைக் கருவியாகப் பயன்பட்ட யாழை இசை மறக்கப்பட்டபின் ஓரழகுப் பொருளாக உயிர்க் கலைப்பண்பறியாதவர் வழங்குவதுபோல, வள்ளுவர் பண்பு மறக்கப்பட்ட பின்னும் அப்பண்பைப் பல தமிழ்ச் சொற்கள் இன்றளவும் இலக்கிய மரபுகளாகவும் உயிர்ப்பிழந்த வழக்கு மரபுகளாகவும் இயக்குகின்றன.

குடும்பக் காதல் இன்பம், கடவுட் பற்றால் பெறப்படும் துறக்க இன்பம் இரண்டும் தமிழில் 'இன்பம்' என்ற ஒரே சொல்லால் குறிக்கப்படுகின்றன. ஒன்று சிற்றின்பம் என்றும் மற்றொன்று பேரின்பம் என்றும் குறிக்கப்படுகின்றன. அவற்றின் வேறுபாடு எல்லை விரிவு மட்டுமே என்பதை இது காட்டுகிறது. பச்தித் துறை கடந்து போகத்துறை நின்ற மறைவாணர்கள் (Mystics) இந்த இரண்டில்கூட விரிவுடைய பேரின்பத்தைவிட எல்லையில் குறுகிய ஆனால் ஆழமிக்க சிற்றின்பப் பண்பையே நீடின்பம், நுணுக்கஇன்பம், பெரும் பேரின்பமாகக் கொண்டு, அம்மொழியிலே கடவுட் பற்றை அகத்துறைபோல விரித்து நுணுகி விளக்கியுள்ளனர். கடவுளுணர்வின் அனுபவமும் காதலுணர்வின் அனுபவமும் ஒரு தன்மையதே என்பதை உலகெங்கும் இத்துறையினர் கண்டுரைத்துள்ளனர். ஆனால் இரண்டும் உண்மையில் ஒன்றேஎன்று விளக்கியவர் வள்ளுவர் ஒருவரே.

**பற்றுக பற்றற்றான் பற்றினை, அப்பற்றைப்**
**பற்றுக பற்று விடற்கு**

இங்கே பற்று என்பதை, ஆசை அவாவென உரை கண்டனர் உரையாசிரியர்கள். பற்றற்ற தன்மை உயர்நிலையானால் அது மனிதரைவிட விலங்குகளிலும், விலங்குகளைக் காட்டிலும் கீழின உயிரிலும், இவற்றைப் பார்க்கிலும் கல்போன்ற உயிரிலாப் பொருளிலும் எளிதாகக் காணப்படும் பண்பு ஆகும். வள்ளுவர் குறுகிய தற்பற்றையே பற்றெனக் கொண்டார். காதலிலும் கடவுளணர்விலும் ஒருங்கே இத்தற்பற்று எளிதில் அழிவதை நாம் இன்றும் காணலாம். உண்மையான கடவுட் பற்று வேறன்று, காதல் வேறன்று.

தமிழர் காதலையும் கடவுட் பற்றையும் ஒரே அகத்துறையாகக் கொண்டதனால்தான் இரண்டையும் இன்பம் என்றனர். காதலுக்குப் புறப்பற்றுக் கோடாக ஒரு காதலன் அல்லது காதலிவேண்டும். கடவுட்பற்றுக்கு அது தானும் தேவையில்லை. இதனாலேயே காதல் இன்பத்தின் அல்லது அகத்தின் புறமாகவும், கடவுட்பற்று இன்பத்

தின் அல்லது அகத்தின் அகமாகவும் வள்ளுவரால் குறிப்பாய் உணர்த்தப்பட்டது. நல்ல காதலை உணர்ந்தவனுக்கு, அதில் ஈடுபட்டுப் பண்பில் வளர்ந்தவனுக்குக் கடவுட்பற்று வேறு தேவைப்படாது. ஏனெனில் அதுவே கடவுட்பற்றின் உருநிழல், ஒளிநிழல் ஆகும். பாரசிகக் கவிஞர்கள் பொதுவாக, கவிஞர் 'ஜாமீ' சிறப்பாக; தமிழ் மறைவாணக் கவிஞர் பொதுவாக, மாணிக்கவாசகர், நாச்சியார் சிறப்பாக; வடபுலத்திலும் ஜயதேவர், சைதன்னியர் குறிப்பாக இவ்வகைக் கடவுட் காதல், காதல் கடவுள் தத்துவத்தில் இழைந்தவர் ஆவர். உலகில் பரவிய இக்கோட்பாட்டைத் தமிழர் பண்பில் பொதுவாகவும் வள்ளுவப் பண்பில் சிறப்பாகவும் இன்னும் பலவகையில் காணலாம்.

குடும்ப இன்பத்தின் நிலைக்களனும் கடவுட் பற்றின் நிலைக்களனும் தமிழில் ஒருங்கே வீடு என்ற சொல்லால் குறிக்கப்படுகின்றன. இடைக்காலத் தமிழ் இலக்கண இலக்கிய ஆராய்ச்சிப் புலவர் இதற்குப் பொருள் கூறுவதிலே இடைக்கால மாயைக்கு ஆளாகின்றனர். கடவுட் பற்று நிலையில் துறக்க வீட்டுக்கு மட்டும் விடுபட்டது வீடு, பற்றுக்களிலிருந்து விலகிய இடம் என்று பொருள் தருகின்றனர். ஆனால் குடும்ப வீட்டுக்குத் துன்பம் விட்ட இடம் வீடு என்று வேறு பொருள் காணகின்றனர். உண்மையில் இரண்டும் துன்பம் விட்ட இடம் என்ற பொருளுக்குத் தகுதியுடையவையே. அது மட்டுமன்று. இரண்டுக்கும் உரிய பகுதியை வள்ளுவர் சுட்டுகிறார். அது வீழ்தல் வீழ்தருதல் என்ற பண்டைத் தமிழ்ச் சொல்லாகும். மேலீடாகக் காதலில் வீழ்தல் **(Fall in love)** ஆங்கில மரபை நினைவூட்டுவதாக இச்சொல் அமைகிறது. ஏனெனின் காதலித்தல் என்பதே அதன் குறிப்பு. ஆனால் அதன் மெய்ப்பொருள் விழுது அல்லது வீழ்து என்பதனுடன் தொடர்புடையது. வீழ்தருதல் என்பது விழுதுபோல் வேர் ஊன்றி விரிந்து பரவப் பெறுதல் என்ற கருத்து உடையது. அதற்கு நிலைக்களமானது வீடு. அது தாய் ஆலமரம்போல வீட்டில் தொடங்கி, வீட்டின் விரிவாகிய ஊர், நாடு, இனம், மொழிஇனம், பண்பினம், மனித உலகு எனப் படராலமரம் போல விரிவுற்றுப் பரவிச் செல்வது ஆகும்.

காதல், பக்தி ஆகியவற்றில் தமிழர் கொண்ட ஒற்றுமை இத்துடன் முடியவில்லை. காதலன் நிலை பக்தன் நிலைபோன்றது. காதலி நிலை கடவுள் நிலைபோன்றது. கடவுளுக்குரிய சொல்லாகிய 'தலைவன்' '*தலைவி*' தமிழ் மரபில் மட்டுமே காதலருக்கும் கடவுளுக்கும் ஒருங்கே வழங்குதல் காணலாம். ஆனால் இங்கும் சமயவாணர் பலர் மறந்து மரபு அறும்படி விட்ட செய்தி ஒன்று உண்டு. பக்தன் கடவுளுடன் பற்றிலிழைந்து இரண்டற்ற ஒன்றற்ற (அத்துவித) நிலை அடையும்போது அவனும் கடவுளாகிறான். சைவர் இதனைச் 'சிவோக' நிலை என்பர். 'சிவமாக்கி என்னை ஆட்கொண்ட' என்று மணிவாசகர் பாடுகின்றார். இக்காரணத்தாலேயே கடவுள் பக்தன் இருவருக்கும் ஒப்பான காதலி, காதலன் இருவரும் தலைவி தலைவர் எனத் தமிழில் குறிக்கப்படுகின்றனர்.

கடவுளைக் காதலிக்கும் பக்தனைக் காதலனுக்கும் ஒப்பாக்கியவர் மாணிக்கவாசகரும் முஸ்லிம்ஞானிகளும் மட்டுமேயாவர். வைணவரும் கிருத்துவரும் பிறரும் கடவுளைக் காதலனாக்கி பக்தனைக் காதலியாக்கினர். வள்ளுவப் பண்பில் இழைந்து நோக்கினால் முன்னதே வள்ளுவர் குறிப்பு என்றும் அதுவே மிகவும் நுண்ணயமும் பொருத்தமும் உடையதென்றும் தெரியவரும்.

காதலன் காதலியை நாடுகிறான். அவள் இருந்த இடத்திலிருந்து அவளிடம் உள்ள மட்டும் இழைய விடுகிறான்.

காதலன் உணர்ச்சி வசமுடையவன். காதலி அறிவுடன் அதை அடக்கிக்கொண்டு அதன் ஆற்றலில் விஞ்சுகிறாள். கற்புநெறியில் தன் திண்மையை அவனுக்கு அளித்து, 'பெண்வழிச் செல்லா' ஆண்மையை அவனுக்கு அளித்து, உலகில் அவனுக்கு 'ஏறுபோற் பீடு நடை' அளிக்கிறாள். வள்ளுவக் காதல் கவிஞரைப்போலவே, அவரைப்பின்பற்றிப் பக்தரும் இந் நிலைகளை வருணித்தல் காணலாம். உன் கடைக்கண் பண்பை பெற்ற பின் நாங்கள் 'ஒருத்தரையும் மதிப்பதில்லை உன்றன் அருளாலே' என்று பாடுகிறது திருப்புகழ்.

கூடல் ஆடவன் காதல் ஆண் பெண் ஊடலில் அவளைக் கடுத தாட் கொண்டு, துணைப்போல் இன்பம் பெருக்குகிறான். இந்த ஊடல் நிலையிலேயே 'இரண்டற்ற ஒன்று, ஒன்றற்ற இரண்டு' நிலைகளை மனிதன் பெறுகிறான். கடவுட் பற்றின் உயிர்முகட்டு நிலையும் அதுவே.

காதலில் சிற்றின்பமாகத் தொடங்கிய இன்பம், கடவுட் பற்றில் பேரின்பமாகி, பண் பார்ந்த காதலியின்பால் அணுகிய காதலனின் உண்மைக் காதலில் இனங்கடந்த நீடின்பமும் இன இன்பமும் ஆகமிளிர்கின்றது.

இன்பம், இனிமை, இனம் - இச் சொற்கள் தமிழில் மட்டுமே சொல் தொடர்புடையன. 'இன்பம் இனம் வளர்ப்பது' இதை வள்ளுவர் குறித்ததுபோல் யாரும் குறிக்கவில்லை. பெண் இன்பத்தைப் பாடிய கவிஞர் எவரும் அதுபோல் பாடவில்லை. ஆனால் பெண் இன்பம் பாடிய எவரும் நுகர்ந்து பாடாத அளவிலும் வகையிலும் குழந்தை இன்பத்தை அவர் ஒருவரே பாடியுள்ளார். அது மட்டுமன்று. அது வெறும் இன்பம் அல்ல. இனஇன்பம். பயனுடைய இன்பம். நீடித்து வளர்ந்து தழைத்துப் பொங்கும் எல்லையிலா இன்பம் தருவது ஆகும். இதனாலேயே.

**'தம்மில் தம்மக்கள்**
**அறிவுடைமை, மாநிலத்து**
**மன்னுயிர்க் கெல்லாம் இனிது'**

என்று இனமுதல் அறிவின் உச்சி கண்ட வள்ளுவர் வாய்மொழிந்துள்ளார். தம்மினும் அறிவுடைய பிள்ளையைப் பெறாதவர் பிள்ளை பெற்றவராகமாட்டார். உலகில் இசை நாட்டியவராகமாட்டார். இந்த அழகிய கருத்தைக் குறளில் காணலாம். உரையாசிரியர் உரைகளில் காண முடியாது.

பெண் இயற்கைத்தாய், இனத் தாயின் உரு. தம்மில் தம் மக்கள் அறிவுடையர் என்பதை அவள் மதிப்பிட முடிவதில்லை. கல்வியில் பெறாத இக்காலப் பெண்கள் நிலையினலென்று உரையாசிரியர் கூறினார், அவர் போலிச் சிற்றறிவுக்கு ஏற்றபடி. உண்மை என்னவெனில், அன்பு மிகுதி காரணமாகவே, தாய் தன் மதிப்பீட்டில் உறுதிகொள்வதில்லை. அதனை உலகமொப்பிய சான்றோர் ஒப்புதல் 'கேட்டு' அகமகிழ்வதாக, அவர் குறிக்கிறார்.

**ஈன்றபொழுதில் பெரிதுவக்கும்**
**தன்மகனைச்**
**சான்றோன் எனக்கேட்ட தாய்**

இம்மகிழ்ச்சியை வள்ளுவர் தந்தைக்கு அளிக்கவில்லை. ஏனெனில் தந்தை இவ்வளவு கைம்மாறு கருதாத மகிழ்வுணர்ச்சியுடையவனன்று. அவன் கடமையாற்றி, பெருமையும் புகழும் கொள்கிறான். தாயாகிய பெண்ணே, இன உணர்வில் மகிழ்கிறாள். அவளே இன இன்ப வடிவினள், இனஅறிவின் சிகரம், இனப்பண்பின் உயர்தளமாதலால்!

★



# இயல்பு!

- தமிழ்வாணன் -

என்னுடைய நண்பர் ஒருவர் இருக்கிறார். அவர் எதற்கெடுத்தாலும் பயப்படும் இயல்புடையவர். அவருக்கு இப்பொழுது இருபத்தேழு வயதாகிறது. இன்னும் அவர் பயப்படுவதை நிறுத்தவில்லை. சும்மா பயப்படுவார். அடிக்கடி பயப்படுவார். இருட்டிவிட்டால், இருந்த இடத்தை விட்டு நகரமாட்டார். நான்கு பேராவது துணைக்குச் சேர்ந்தால்தான் நகருவார். அவர் சினிமாவிற்கு, இரவுக் காட்சிக்கு இதுவரை போனதே இல்லை. அவர் சினிமாவிற்குப் போனால், ஞாயிற்றுக்கிழமையன்று காலைக்காட்சிக்குத்தான் போவார். இல்லாவிட்டால் பிற்பகல் காட்சிக்குப் போய் விட்டு, இருட்டுவதற்கு முன்பே, படம் முடிந்தாலும் முடியாவிட்டாலும் வீட்டிற்கு வந்து விடுவார்! இருபத்தேழு வயதாகியும் இவர், இன்னும் இருட்டைக்கண்டு பயப்படுகிறார், சிறு குழந்தைபோல!

கயிறைக் கண்டால், "இந்தக் கயிறு பாம்பு மாதிரி இல்லே?" என்பார்!

காய்ந்த சருகைக் கண்டால், "இந்தச் சருகு, தேள் மாதிரி இல்லே?" என்பார்!

மரக்கிளைகள் ஆடுவதைக் கண்டால், "இந்த மரம் பிசாசு மாதிரி இல்லே?" என்பார்.

இது மட்டுமல்ல. அவர் பேசும்போதே, "பயம்மா இருக்கு" என்று அடிக்கடி சொல்லுவார்!

அவர் அடிக்கடி சொல்லுவதைக் கீழே தந்திருக்கிறேன் பாருங்கள்.

"சார், இன்னிக்கி பீச்சுக்குப் போயிருந்தேன். ஆனா, அந்தப் பெரிய சமுத்திரத்தைப் பார்க்கறப்போ பயம்மா இருக்கு"

"சார், பஸ்ஸிலே போறப்போ வளைவிலே திரும்பறுன் பாருங்க, அப்போ பயமாயிருக்கு!"

"சார், தூங்கிக்கிட்டே இருக்கறப்போ, திடீர்னு கண்ணை முழிச்சுட்டா பயம்மாயிருக்கு!"

இப்படி, அடிக்கடி, எதைக் கண்டாலும், எதற்கெடுத்தாலும் பயப்படும் இயல்புடையவர்கள், எட்டி மரம்போல் இருந்தும் ஒன்றுதான்; இறந்தும் ஒன்றுதான்!

அதனால்தானே நெப்போலியன் சொல்லுகிறான், "கோழை கோடித் தரம் சாகிறான்" என்று!

காந்தியார்கூடச் சின்ன வயதில், இப்படித்தான், எதற்கெடுத்தாலும், எதைக் கண்டாலும் பயப்படும் இயல்புடையவராயிருந்தார். இரவில் படுக்கையில் படுத்ததும், பாம்பு வந்து விடுமோ, பூரான் வந்து விடுமோ என்று அடிக்கடி விளக்கைப் போட்டுப் பார்ப்பார்!

அவர், மனிதர்களைப் பார்ப்பதற்குப் பயந்தார். மனிதர்களோடு

சேர்ந்து சிரிப்பதற்குக்கூடப் பயந்தார்!

இப்படி, எதற்கெடுத்தாலும், எதைக் கண்டாலும், எவரைப் பார்த்தாலும் பயந்த அவர்தான், ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடி, அடிமைத்தளைகளை அறுத்தெறிந்து அஞ்சா நெஞ்சத்தைக் காட்டிய வீரர்!

இப்படி, இயல்பில் ஏற்படும் பயத்தை அறுத்தெறியும் வல்லமை கொண்டவர்கள் வாழ்கிறார்கள்; முடியாதவர்கள் சாகிறார்கள்!

எனக்கு மற்றொரு நண்பர் இருக்கிறார். அவர் ஒரு வழவழா மனிதர். அவர் சும்மா எப்பொழுதும் வழவழா, வழவழா என்று பேசிக் கொண்டேயிருப்பார். அவரைக் கண்டால், எனக்கு மிகவும் பயம். ஏனென்றால், நம்முடைய பொன்னான நேரத்தைத் திருடுபவர்களைப் போலப் பொல்லாத பகைவர்கள் வேறு எவரும் இருக்க முடியாது. நம் பொருளைக் கவர்ந்தால் மன்னிக்கலாம். நம் பொழுதைக் கவர்ந்தால் மன்னிக்கக்கூடாது!

  



''ஒரு நாளைக்கு எத்தனை தடவை 'சவரம்' செய்துகொள்கிறீர்கள்.''

''நானா! தினம் நாற்பது ஐம்பது தடவை செய்வேன்.''

''உங்களுக்கு என்ன பைத்தியமா.''

''சே! சே! என்னுடைய தொழிலே இதுதானே!''

அந்த வழவழா நண்பர், என்னிடம் வருவார். என்னிடம் வந்ததும், "சார் வீட்டு வரி கட்டச் சொல்லி முனிசிபாலிடியிலேயிருந்து நோட்டீஸ் வந்திருக்கு. இப்போ என்ன பண்றது?'' என்று கேட்பார்.

"வீட்டு வரியைக் கட்டுங்க'' என்பேன்.

''ஐயா, வீட்டு வரியைக் கட்டறதுக்குக் கையிலே பணமில்லே. அப்போ?'' என்று கேட்பார்.

"கடன் வாங்கிக் கட்டுங்க'' என்பேன்.

''ஐயா, கடன் ஒருத்தனும் தர மாட்டேங்கறான். அப்போ!'' என்று கேட்பார்.

''வீட்டை ஜப்தி பண்ணிப்பிடுவான்'' என்பேன்.

"ஐயா, ஜப்தி பண்ண வர்றவங்களை ஆள் வச்சு அடிக்கிறோம். அப்போ?'' என்று கேட்பார்.

"போலீஸ் கேசா மாறும்'' என்பேன்.

''ஐயா, பெரிய கிரிமினல் லாயரை வச்சுக் கேஸ் நடத்தறோம். அப்போ?'' என்று கேட்பார்.

"செலவு ரொம்ப ஆகும்'' என்பேன்.

''ஐயா, வீட்டை வித்துச் செலவழிக்கறேன். அப்போ?'' என்று கேட்பார்.

"செலவழிங்க சார். யார் வேண்டாமின்னு சொன்னது? இதுக்கு என் உசிரைப்போட்டு ஏன் வாங்கறீங்க?'' என்று எரிச்சலோடு நான் அந்த இடத்தை விட்டு எழுந்து போய்விடுவேன்!

இப்படிப்பட்ட இயல்பு கொண்டவர்களால் எந்தவிதப் பயனும் கிடையாது. இவர்களெல்லாம், பெருதற்கரிய மானிடப் பிறவியின் பெருமை தெரியாத நடைப் பிணங்கள்! 




– கண்ணதாசன் –

களைமண்டிக் கிடந்த கனித்தமிழ் மொழியைக்
களைநீக்கி வடித்த கவிஞன் பாரதி!
களைநீக்கித் தந்த கழனியிற் பலவாய்
கனிக்காடு கண்டவர் பாரதி தாசன்!

இருள்சூழ்ந் திருந்த இவ்வைய முழுதும்
எழக்கதி ரான இளைஞன் பாரதி!
எழுந்த கதிர்முன் மானிடச் சாதிக்கு
இரத்தம் ஊட்டினர் பாரதி தாசன்!

ஆதி பத்திய வேரறுக் குந்திறன்
ஆக்கித் தந்த வல்லவன் பாரதி!
அந்த வேரை அறுத்தபின் மறுவேர்
அண்டாது காத்தவர் பாரதி தாசன்!

நிலைகுலைந் திருந்த நெஞ்சினைத் தூக்கி
'நில்'லெனச் சொன்ன வல்லோன் பாரதி!
நிற்க வைத்த நெஞ்சினைக் கட்டி
நிலைக்க வைத்தவர் பாரதி தாசன்!

''எங்கள் நாடு எங்கள் மொழி''யென
இயம்புந் திறனைத் தந்தவன் பாரதி
இயம்ப மறுத்து ஏளனம் செய்தோர்
எலும்பை முறித்தவர் பாரதி தாசன்

முன்னவர் சொன்ன பண்பா டனைத்தும்
முறையாய்த் தந்த மூத்தவன் பாரதி
முறையாய்த் தந்ததை வகைவகை யாக்கி
முளைக்க விட்டவர் பாரதி தாசன்

செந்தமிழ் மலரின் தேனுண்ண வாசலைத்
திறந்து விட்ட தலைவன் பாரதி
திறந்த வாசலின் வழிப்புறம் மாடுகள்
செல்லாது காத்தவர் பாரதி தாசன்

வகுத்தவன் முன்னோன்; காத்தவன் பின்னோன்!
வாழுந் தமிழின் காவலர் இவர்கள்!

(வேறு)

பாருக்குள்ளே சமதர்மமும்-ஒன்றிப்
பற்றுஞ் சகோதரத் தன்மையும்-சொல்லி
யாருக்குந் தீமை செய்யாமலே-என்றும்
அன்புகொளுந் திறந்தந்தவன் முன்னோன்!

"உண்மையின்பேர் தெய்வம் என்போம்-அன்றி
ஓதிடும் தெய்வங்கள் பொய்யெனக் கண்டோம்
உண்மைகள் வேதங்கள் என்போம்-பிறி(து)
உள்ள மறைகள் கதையெனக் கண்டோம்

கடலினைத் தாவும் குரங்கும்-வெங்
கனலிற் பிறந்ததோர் செவ்விதழ்ப் பெண்ணும்
வடமலை தாழ்ந்தத னாலே-தெற்கில்
வந்து சமன்செயும் குட்டை முனியும்

நதியினுள்ளே முழுகிப் போய்-அங்கு
நாகர் உலகிலோர் பாம்பின் மகளை
விதியுறவே மணம் செய்த-திறல்
வீமனும் கற்பனை" என்றவன் முன்னோன்.

அன்னவன் கைகளிற் பட்டால்-பிள்ளை
அழுதகண் ணீரிலும் உதிரங் கொதிக்கும்
கன்னியர் நன்னெறி வீழ-மறம்
காட்டுபவர்க் கவன் காட்டு விலங்காம்!

"காதலினு லுயிர் தோன்றும்-இங்கு
காதலினுலுயிர் வீரத்திலேறும்
காதலினு லறிவெய்தும்-இங்கு
காதல் கவிதைப் பயிரை வளர்க்கும்"

பாரதி சொன்னதனுலே-காதல்
பாட்டர்கள் நெஞ்சிலும் ஏறுங்தன்னுலே!
பாரதி தாசனும் சொன்னுர்-எனின்
பாரதி சொன்னதன் பின்பவர் சொன்னுர்!

பிள்ளைக் கனியினைக் கட்டி-இன்பம்
பெற்றவன் மற்றவர் பெற்றிடத் தந்தான்!
வெள்ளை மனத்தொரு பெண்ணின்-நெஞ்சில்
வீழ்ந்தவன் நம்மையும் வீழ்ந்திடச் செய்தான்!

கற்பனை வாழ்விது மாயம்-எனக்
காட்டிய சாமிகள் சாத்திரச் சாயம்
விற்பனன் பாரதி சொல்லில்-கெட
வீழ்வது தான்அவன் காவிய மாயம்!

நிற்பது ஊர்வது யாவும்-இந்த
நிலத் துள்ளநல் இன்பங்கள் யாவும்
அற்புதச் சிந்தனை யாவும்-நிலை
ஆவதில்லை என்ற சூதரைக் கொண்டா!

சோலை மரங்க ளனைத்தும்-தினம்
தோன்றுவ தேயொரு விதையினி லென்றல்
சோலைகள் பொய்யென லாமோ-இதைச்
சொல்லொடு சேர்ப்பவர் மூடர்க ளன்றே?

"பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான்-புவி
பேணி வளர்த்திடு மீசன்!
மண்ணுக் குள்ளே சிலமூடர்-நல்ல
மாதரறிவைக் கெடுத்தார்!"

எண்ணித் துடித்தவன் சொன்னுன்-"கண்கள்
இரண்டினி லொன்றைக் கெடுத்திட லாமோ?
பெண்க ளறிவைவ ளர்த்தால்-வையம்
பேதமை யற்றிடும்!" ஆம்!-இது உண்மை!

பாரதி பாரதி தாசன்-இரு
பைந்தமிழ்ப் பாவலர் தம்மிடை யேயும்
பாரதி பல்லவி சொன்னான்-தாசன்
பாக்கியைப் பாடிக்தன் பாட்டை முடிக்தான்!

பாரதி பாட மறந்த-ஒரு
பக்கம் திராவிட நாட்டின் எழுச்சி
யாரதைப் பாடிய வீரன்?-வேறு
யாரவன், பாரதி தாசனல் லாமல்!

இற்றைய மாந்தரின் எண்ணம்-நன்(கு)
ஏற்ற முறத் தந்த பாரதிதாசன்
பிற்றைய நாளில் தனக்கே-ஒரு
பேரிடம் கொண்டனன்! மூடுதற்கில்லை!

பெண்கள் விடுதலை காதல்-திறம்
பேசுந் தமிழின் கனிரசம், இன்பம்
மண்ணில் அனைவரும் ஒன்றே-என
வாழ்த்தும் புதுக்குரல் வாழ்க்கையின் நீதி

சாத்திரம் பொய் யெனும் சூடு-தண்டச்
சாகசப் பார்ப்பனர் செய்கையின் மீது
ஆத்திரங் கொள்ளும் குணங்கள்-இவை
யாவிலும் பாரதி மூத்தவன் என்பேன்!

இந்த வகைகளில் ஒன்றை-தாசன்
எப்படிப் பாடி எழில் தந்த போதும்
"தந்தையர் பாரதி" என்றால்-அவன்
தாச னுரைத்தது தானிந்த வார்த்தை!






அவன் ஒரு ஓவிய நிபுணன். ஓவியம் வரைவதில் அவனுக்கிருந்த திறமையையும் வெறியையும் பார்த்தால் அவனை ஒரு "ஓவியக் கடல்" என்றுதான் கூறவேண்டும். அவனது கைவண்ணம் இல்லாத பத்திரிகைகளைப் பார்ப்பதே அரிது. கலையை ஆதாரமாகக் கொண்டு வயிறை வளர்த்துவிட முடியுமா என்று யாரேனும் கேட்பார்களாயின் அவர்களுக்கு அவனை உதாரணமாக எடுத்துக்காட்டலாம். ஒவ்வொரு நாளும் அவனைத் தேடி "ஆக்கம்" ஓடி வந்தது. ஊக்கம் உடையான் உழை, ஆக்கம் அதர் வினைய்ச் செல்லும் என்ற வாசகம் அவனைப் பொறுத்த வரையில் நூற்றுக்கு நூறு உண்மையாகவே இருந்தது.

அவன் பெயர் சொர்ணம்.-ரசிகத் தன்மை நிறைய உண்டு அவனுக்கு. அழகின் அளவை அளவெடுத்து அறிந்திருந்தான் அவன். அவன் கைபட்ட எதுவுமே கைபட்ட மறு நிமிடமே கவின் பெற்றுத் திகழும். ஆனல்...! ஆனல் ஒரே ஒருகுறை!

அவன் அழகு இல்லாதவனுக இருந்தான். இன்னும் தெளிவாகக் கூறவேண்டுமாயின் அவலட்சணத்தின் அவதார வடிவமாக விளங்கினன் அவன். அது அவன் செய்த தவறல்லவே?

அழகு அவன் உடலில் இல்லையே தவிர உள்ளத்தில் நிறைய இருந்தது. அவனைப் படைத்தவர்கள் அவலட்சணமாகப் படைத்துவிட்டார்களே தவிர, அவன் முன்னின்று படைத்த பொருள்கள் அனைத்துமே அழகுத் தெய்வத்தின் வாரிசுகளாக விளங்கின.

பத்திரிகையைக் கையில் எடுத்ததும் சொர்ணத்தின் சித்திரங்களை முதன் முதலாகப் பார்த்துவிட வேண்டும் என்ற துடிப்போடு இருந்துவரும் பல பக்தகோடிகளும் இருக்கத்தான் செய்தனர். அவர்களுள் சிறப்பாகக் குறிப்பிட்டுப்

**★ ஓவியத்தின் எழிலைப் பார்த்து மகிழ்ந்தாள்!-அவனைத் தேடி அலைந்தாள். ஏங்கித் தவித்தாள்! ஏக்கம் அவளை எலும்புந் தோலுமாக்கியது. இறுதியில் அவன் வந்தான்! ஆனால்... ? ★**

பேச வேண்டுமாயின் பரிமளாவைக் கூறலாம்.

பரிமளா அழகு நிறைந்த பருவப் பெண். கல்லூரியில் படித்துத் தேறிய மாணவி. ஓவியக் கலையில் உள்ளத்தைப் பறிகொடுத்துவிடும் இயல்புடையவள். பெற்றோர் களுக்கு ஒரே ஒரு புதல்வி. பழை மையில் நாட்டமும் நம்பிக்கையும் கொண்டவள். என்றாலுங்கூட புது மைக்கு அடிபணிந்துவிடும் சுபாவ மும் உடையவளாகும்.

சொர்ணத்தின் ஓவியங்கள் பரி மளாவின் கருத்தை வெகுவாகக் கவர்ந்து நின்றன. ஓவியங்களில் கருத்து மயக்கங் கொண்ட பரிமளா ஓவியத்தை வரைகிறவர் ஒரு பெண் என்றே நெடுநாட்கள் நினைத்து வந்தாள். காரணம், சொர்ணம் என்ற பெயர் ஆணுக்கு உரியது போலவே பெண்ணுக்கும் உரிய தாகும். வெகு நாட்களுக்கு அப் புறந்தான் "சொர்ணம்" ஆண் என்ற இரகசியத்தை அறிந்து கொண்டாள் பரிமளா. அதுவும் ஒரு பத்திரிகை ஆசிரியரின் விளக்க வுரையைப் படித்துப் பார்த்ததின் மூலம். அந்தப் பத்திரிகை ஆசிரி யருக்கு உடனே தபால் எழுதி ஓவியரின் முக வரியைப்பெற்றுக் கொள்ள விரும் பினாள். பின்னர் என்ன நினைத் தாளோ, தெரிய வில்லை. தன் உற வினன் ஒருவனை விட்டு ஓவிய ரின் விலாசத்தை அறிந்துவர ஏற்பாடு செய்து கொண்டாள். சில நாட்களுக்குப் பிறகு ஓவியரின் முகவரியும் கிடைத்து விட்டது. அப்போது அவள் கொண்ட ஆனந்தத்துக்கு அளவு சொல்லமுடியாது. வெறும் விலாசம் கிடைத்ததற்கே இந்தப் பாடாக இருக்கும்போது, விலாசத் திற்குரியவனே கிடைத்து விட்டால் கேட்கவா வேண்டும்?

அவளும் அதைத்தான் விரும் பினாள். எப்படியேனும் அந்த ஓவியனைத் தன் உள்ளங் கவர்ந்த நாயகனாக ஆக்கிக்கொள்ள வேண் டும் என்றுதான் அவள் துடியாய்த் துடித்தாள். மறைமுகமாக ஓவி யருக்குக் கடிதம் எழுதினாள். ஓவி யரும் தவறாது பதில் எழுதினார். கடிதங்கள் தூதுவர்களாகச் சில காலம் பணிபுரிந்து வந்தன.

ஒருமுறை தன்னுடைய புகைப் படம் ஒன்றை இணைத்து வைத்து போதாக்குறைக்குத் தன் வாழ்க்கை வரலாற்றையும் விரிவாக எழுதி அனுப்பிவிட்டு, அதேபோல ஓவி யருடைய புகைப்படத்தையும் வாழ்க்கை வரலாற்றையும் கேட் டிருந்தாள் பரிமளா. அக்கடிதத் திற்குப் பதில்எழு திய ஓவியர் தன் வரலாற்றை வரி வரியாக எழுதி, தற்போது செல்வ வளத்தோடு இருப்பதை நயம் படச் சுட்டிக் காட்டிவிட்டு புகைப் படத்தை மட்டும் விரைவில்

"நாங்கள் மூன்று ஆண்டுக் கொரு முறைதான், விடுமுறை யைக் கழிக்க வெளியூர் செல் வோம்."

"மற்ற இரண்டு ஆண்டுகளில் என்ன செய்வீர்கள்."

"முதல் ஆண்டு கழித்த விடு முறையைப் பற்றிப் பேசுவோம். இரண்டாம் ஆண்டு, அடுத்த விடு முறையை எப்படிக் கழிப்பது என்று பேசித் திட்டமிடுவோம்."

அனுப்பி வைப்ப தாக எழுதி இருந் தார்.

நாட்கள் பலவா கியும் கடிதங்கள் பலவாகப் பெரு கினவே தவிர புகைப்படம் வந்து சேரவில்லை பரிமளாவுக்கு. "வரும் வரும்" என்று அவள் தன்னைத் தானே தேற்றிக் கொண்டாள். இலையுதிர் காலம் துவங்கிவிட்டது. நன்கு பசுமை யோடு காட்சி அளித்த மரங்கள் எல்லாம் இலைகளையும் தழைகளை யும் பறிகொடுத்துவிட்டு "பந்தயத் தில் பறிகொடுத்துவிட்ட சூதாடி களைப் போலக்" காட்சி அளித்தன.

பைத்தியக்கார ஆஸ்பத்திரியைப் பார்வையிடச் சென்ற பெரிய மனி தர் ஒருவர், அங்கே இருந்து வெளியே உள்ள ஒருவருக்குபோன் பண்ண பலமுறை முயன்றும் முடிய வில்லை. கடைசியில் கோபம் கொண்ட அவர் போனில் ஆப்ப ரேட்டரிடம் "நான் யார் என்று தெரியுமா?" என்று கேட்டார்.
"தெரியாது! ஆனல் எங்கே இருக்கிறீர்கள் என்று தெரியும்."

பரிமளா எங்கோ வெளியே சென்றுவிட்டு வீடு திரும்பினுள். அப்போது அவளுக்காக அவளது தோழி ஒருத்தி வீட்டில் வந்து காத்துக்கொண்டிருந்தாள். அவள் கையிலே ஒரு விசேஷ மலர் ஒன்று காட்சி அளித்தது. அதை அவசர அவசரமாக வாங்கி ஒவ்வொரு ஓவியமாகப் பார்த்துப் பார்த்து ரசித்தாள் பரிமளா. கடைசிப் பக்கத்தில்.. ...அதைப் பார்த்ததும் அவள் ஏன் அப்படி பேயறை கொண்டவள்போல பேதலிக்க வேண்டும்? அந்தப் பக்கத்தில் அப்படியென்ன பயங்கரமான பூதம் அல்லது பேய் ஏதாவதொன்றின் சித்திரம் வரையப்பட்டிருந்ததா? அதொன்றுமில்லை. ஆனல்...ஆனல் அங்கிருந்த படம் அவளது ஆசை நாயகனின் உருவப் படம்தானே? அதைக் கண்டு அவள் மருள வேண்டிய காரணம் என்ன?

மருளுவதுடன் நின்ருலுங்கூடப் பாதகமில்லை, அழவும் அல்லவா துவங்கிவிட்டாள்! ஏன் அழு கிருள் அவள் அழுவ தற்குக் காரணம் இருக்கத்தான் செய்தது. இம் மாதிரியான வேத னைகளை அனுப வித்தால்தான் அறிய முடியும்.

"சொர்ணம்."

சொர்ணம் என்ருல் தங்கம், அழகு என்று பொருள். அழகுப் பொருள்களை அழியாப் பொருள் களாக ஆக்கித் தரும் சொர்ணமும் அழகுப் பொருளாக அழியாப் பொருளாக இருப்பான் என்றுதான் பரிமளா எண்ணினுள். இன்பக் கோட்டைகள் கட்டினுள். புதையல் என்ற நம்பிக்கையோடு ஆழமாகக் குழியைத் தோண்டும்போது அகப் பட்ட பொருள் பிணப் பெட்டியாக இருந்துவிட்டது. புதையல் இல்லா மல் இருந்தாலுங்கூடத் தேவலை, அந்தப் பிணப் பெட்டி எதற்காகக் கிடைக்க வேண்டும்?

"புகைப்படத்தை விரைவில் அனுப்பிவைப்பதாக," ஒவ்வொரு கடிதத்திலும் சொர்ணம் எழுதி வந்ததின் பொருள் இப்போதுதான் தெரிந்தது பரிமளாவுக்கு. எழிலின் உருவமாக எண்ணி வந்தவனின் தோற்றம், ஏக அவலட்சணமாக இருந்தமையால் ஏற்பட்ட அதிர்ச்சி தான். இருந்தாலும் வெளிப் பார் வைக்கு நிலைமையைச் சமாளித்துக் கொள்ள முயன்ருள்.

பின்னர் தோழியுடன் தட்டுத் தடுமாறி சில வார்த்தைகள் பேசி அவளை அனுப்பிவிட்டாள், தன் உடல்நலஞ் சரியாக இல்லை என்ற காரணத்தைச் சொல்லி. தோழியும் போய்விட்டாள். போகும்போது தான் கொண்டு வந்த விசேஷ மலரைத் திரும்ப வாங்கிக்கொள்ள மறந்துவிட்டாள்.

மலரைப் புரட்டிப் புரட்டிப் பார்த்து மனம் புழுங்கினுள் பரிமளா. இம்மாதிரி எண்ணத்தில் ஏமாற்றம் ஏற்படுகிறபோது ஒரு பொல்லாத வியாதி பிறப்பதுண்டு. அதனே "சிபிர்ஸ்" என்று சொல்லுவார்கள். இவ்வியாதியால் பீடிக்கப்பட்டவர்களைக் காப்பாற்றுவதற்கு "மன நிறைவு" தருவது ஒன்றுதான் சரியான மருந்து.

பரிமளாவ்வ அவ்வியாதி பற்றிக் கொண்டது. அக்கொடிய நோயின் அரவணைப்பில் அகப்பட்டுக் கொண்டு அலறித் துடித்தாள், அவதிப்பட்டாள்.

"என்னை மறந்துவிடுங்கள்", என்று ஒரு பெரிய பேப்பரில் சிறிதாக எழுதித் தன் கையெழுத்தைப் போட்டு ஒரு கடிதத்தை ஓவியருக்கு அனுப்பிவிட்டாள். மனப்புயலில் ஒரு பகுதி ஓய்ந்தது என்ருலுங்கூட



"மிஸ்டர் கோப், உங்களுடைய ஆபீஸ் டெலிபோன் நம்பரைக் கொடுத்தால் தேவைப்படும்போது கூப்பிட வசதியாக இருக்கும்."

"அதுதான் டெலிபோன் டைரக்டரியிலிருக்கிறதே"

"அப்படியா! ஆபிஸ் பெயர்?"

"ஓ! அதுகூட டைரக்டரியிலிருக்கிறதே!"

நோயின் தாக்குதல் வெகுவாகப் பரவி இருந்தது அவள் உடல் முழுதும்.

சன்னல் வழியாக வான வெளியைப் பார்த்துப் பார்த்துப் பெருமூச்சு விட்டபடியே படுத்த படுக்கையாய்க் கிடந்தாள் பல நாட்கள். பெற்றெடுத்தவள் பெரும்பாடு பட்டாள் மகளைக் காப்பாற்றுவதற்கு. மருத்துவர்கள் பலர் அழைத்து வரப்பட்டனர். அவர்கள் மருந்து தரமுடியாது என்று கூறிவிட்டு போதனை செய்து போய்விட்டனர். "மனநிறைவு ஏற்படும்படியாக அவளைப் பாதுகாக்க முடியுமாயின் நோய் குணமாகிவிடும்" என்பது தான் மருத்துவர்கள் தந்த போதனை. இலையுதிர் காலமாதலின் சன்னலை அடுத்து நின்ற மாமரம் தன் இலைகளையெல்லாம் பறிகொடுத்துவிட்டு பத்தே பத்து இலைகளோடு காட்சி அளித்தது. அந்தப் பத்து இலைகளில் ஒன்று நழுவிக் கீழே விழுந்தது. அவ்வளவுதான். பரிமளா படுக்கையைவிட்டு எழுந்து நின்று "ஒன்பது" என்று கத்தினுள். அவள் கத்தி முடிவதற்குள்ளாக அடுத்த இலை ஒன்றும் உதிர்ந்துவிட்டது. "எட்டு" என்று அதே குரலில் அபாயம் தொனிக்கக் கூச்சலிட்டாள்.

பாழாய்ப்போன பேய்க்காற்று ஒன்று அந்த நேரத்தில் அடிக்கவே ஆறு இலைகள் அடுத்தடுத்து உதிர்ந்துவிட்டன.

ஏழு, ஆறு, ஐந்து, நான்கு, மூன்று, என்று ஒரே மூச்சில் அலறினுள்

— 49-ம் பக்கம் —



# நாஸ்திகன்

1852-ம் ஆண்டு. அப்போது நான் பிரஸல்ஸ் நகரத்திலிருந்தேன். ஒரு நாள், யாரோ, என் வீட்டுக் கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. சென்று பார்த்தேன். வாயிற்படியருகே ஒரு மனிதன் நின்றுகொண்டிருந்தான். இளம் வயது; அவனுடைய உடலமைப்பு, உண்மை, உயிர், உறுதி இவைகளை தெளிவாக எடுத்துக் காட்டியது. சிரித்த முகம்; வெள்ளை லெனன் கால் சட்டையும், வெல்வெட் கோட்டும் அணிந்திருந்தான். கோட்டில் அழகிய மலரொன்று காணப்பட்டது. கைகளில் கையுறை அணிந்து, வலது கையில் நாகரிகமாக ஒரு சிறு பிரம்பைப் பிடித்துக் கொண்டிருந்தான்.

நான் வீடு தேடிவந்தவனை யாரென்று வினவினேன்.

“நான் ஒரு பாதிரி; இல்லை, இல்லை, பாதிரியாக இருந்தவன். உண்மை ஒளியைக் காண்பதற்கு பொய்யாகிய இருளுக்கு விடை கொடுத்துவிட்டு வந்தவன்.”

நான் அவனை வீட்டுக்குள் வந்து உட்காரும்படி வேண்டிக்கொண்டேன். அவனும் அதற்குச் சம்மதித்தான்.

“என் பெயர் அனத்தோல்லாரி,” என்றான். இப்படியாக எங்களிருவருக்கும் பேச்சு வளர்ந்தது.

அனத்தோல்லாரி தன் வாழ்வில் நடந்த ஒவ்வொரு சம்பவத்தையும் ஒளிவு மறைவின்றி என்னிடம் விவரித்தான். அவனுக்கு அப்போது இருபத்தைந்து வயது நடந்துகொண்டிருந்தது. அவனுக்கு திடீரென்று பாதிரியாகப் போகவேண்டுமென்று எண்ணம் தோன்றியது. முன்பின் யோசியாமல், பாதிரியாக உறுதிகொண்டான். பாதிரியாக படிக்க வேண்டிய வேத பாடங்களையெல்லாம் படித்து முடித்தான். அந்தக் காலம் மிக விரைவாக ஓடியது. பாதிரிப் படிப்பு முடிந்ததும், முதன் முதலில் கோயிலுக்குச் சென்று பூசை வைப்பது ஒரு விசேஷ நிகழ்ச்சி. லாரி, தன் முதல் பூசையை மிகவும் கஷ்டப்பட்டு முடித்துக் கொண்டான். பூசை முடிந்ததும், பீடத்தை விட்டு வருகையில், தான் கனவுலகத்தில் சஞ்சரிப்பதாக ஒரு பிரமை யேற்பட்டது. வாழ்க்கையில் மறைந்து கிடக்கும் மாபெரும் ரகசியங்கள் பலவும் அவனுக்கு விளங்கவில்லை. உலகமே ஒரு ஆச்சரியக் களஞ்சியமாகத் தென்பட்டது.

லாரி, பாதிரியாகப் போகையில் அவனுக்கு இருபத்தைந்து வயது. அவன் நரம்புகளிலே உயிர்நிறைந்த ரத்தம் ஓடிக்கொண்டிருந்தது. மிகவும் இளம் வயதுடையவனாகையால், உலகின் பாச பந்தங்களை அறுத்து, இயற்கையில் ஏற்படும் உணர்ச்சிகளை அவனால் அடக்க முடியவில்லை. லாரி, அவ்வாறு அடக்குவதே பாவம் என்று கருதும்

மூலம் :
**விக்டர் யூகோ.**

தமிழில் :
**அழகரசன், பி. ஏ.**

அளவிற்கு வந்து விட்டான். கடைசியில் தனக்குப் பாதிரியாகப் போவதற்கு கொஞ்சமும் 'பிராப்தம்' இல்லை யென்பதைத் தெளிவாய் உணர்ந்து கொண்டான்.

பல ஆண்டுகளாக உணர்ச்சியின் பேயாட்சியை எதிர்த்துப் போராடினான். கடுமையாகத் தன்னை ஒறுத்துக் கொண்டு, தெய்வீக விஷயங்களில் தன் சிந்தனையைச் செலுத்திப் பார்த்தான். கடுமையான போராட்டம்! முடிவில் போராட்டம் தோல்வியில் முடிந்தது. அதாவது, மனிதத் தன்மை தெய்வீகத்தை வென்று விட்டது. லாரி, பாதிரித் தொழிலுக்கு முழுக்குப் போட்டுவிட்டு வெளியேற முடிவு செய்தான். அவன் முன் இளமை, சுகம், உலகம் எல்லாம் தன்னிடமுள்ள இன்பத்தை அள்ளியள்ளிக் கொடுக்கத் தயாராயிருந்தன. ஆம்; லாரிக்கு விடுதலை கிடைத்தது.

அவனை 'பதிதன்' (வேத விரோதி) என்று உலகம் தூற்றுவதைப்பற்றிக் கவலைப்படவில்லை. தன் நிலைக்குப் பொருந்தாத ஆசைகளை மனதில் வைத்துக் கொண்டு, பக்தி வேஷம் போடும் அயோக்யன் என்று யாரும் தன்னைச் சொல்லி விடக்கூடாது என்பதே லாரியின் கவலை.

பாதிரித் தொழிலுக்கு தலை முழுக்குப் போட்டுவிட்டு மடத்தை விட்டு வெளியேறிய லாரிக்கு, மேற்கொண்டு என்ன செய்வதென்று தெரியவில்லை. ஜனநாயகம் ஒன்றுதான், அவனுக்குப் பிடித்தமான கொள்கையாக விருந்தது. பாதிரியாவதற்கு முன்பிருந்தே, அவனுக்கு பொது ஜனங்களிடம் அதிக அன்பும் அக்கறையுமுண்டு. உண்மையிலேயே லாரி ஒரு ஏழைக்குடியானவனின் மகன். அவனுடைய குடும்பத்தவர்கள் மிகவும் ஏழைகளாக பிரித்தானி என்ற இடத்தில் வசித்து வந்தார்கள். நீர்த்துளி கடலையடைவது போல தானும் பொதுஜனங்களிடம் சென்று, அவர்களுக்கு சேவை செய்து தொண்டாற்றுவது சிறந்த பணியென்று நினைத்தான். லாரிக்கு என்றுமில்லாத மன வமைதி ஏற்பட்டது.

இந்த விவரங்களையெல்லாம் லாரி என்னிடம் சாதாரணமாகவே எடுத்துச் சொன்னான். தற்பொழுது அவன் ஒரு அரசியல் வாதி. பல பத்திரிகைகளுக்கு ஆராய்ச்சிக் கட்டுரைகளும், அறிக்கைகளும் அனுப்பியிருக்கிறான். அவனை கொள்கையை லேசில் விட்டுக் கொடாத ஒரு புரட்சிக்காரன் என்றுதான் சொல்ல வேண்டும்.

தன் வாழ்க்கை விவரங்களைச் சொல்லி முடித்ததும், தன் லட்சியக் கொள்கைகளை எடுத்துக் கூறினான்.

"நண்பரே! நாம் பலவற்றிலிருந்தும் பாடம் கற்றுக்கொள்ள வேண்டும். இன்றிலிருந்து ஜனநாயகத்தை உலகம் முழுவதும் பரப்ப வேண்டும். மனிதனைப் புதிதாக உண்டாக்க வேண்டும். சுருக்கமாகச் சொல்லவேண்டுமானால், கல்வி முறையில் தர்க்க ரீதியான மாபெரும் புரட்சி செய்தாக வேண்டும்" என்று லாரி முழங்கினான்.

"என் அபிப்ராயமும் அதுதான்" என்று நான் ஒத்துக்கொண்டேன்.

"நண்பரே! என்னைப் பொறுத்தவரை கல்வியென்பது இதில்தான் அடங்கியிருக்கிறது. தெய்வீகத்தை மனிதனின் மனத்திலிருந்து வேரோடு ஒழித்துக் கட்டிவிட வேண்டும். அதுதான் உண்மையான கல்வி."

"நீ சொல்வது எனக்கு விளங்கவில்லையே"

"அதாவது மனிதன், மதமென்ற மாயைக்குள் சிக்கி பாழ்பட்டுப் போகிறான். மூடநம்பிக்கை எதிர்கால முன்னேற்றத்திற்குப் பெரிய முட்டுக் கட்டையாக விருக்கிறது

உலகிலுள்ள ஒவ்வொரு நாடும், தன் சுய அறிவை இழந்து, மதச் சண்டைகளில் வீண் காலம் போக்கிக்கொண்டிருக்கின்றன. நண்பரே! மனிதனின் மனம் ஒரு கப்பல்; அது அறிவாகிய கடலிலே தங்கு தடையின்றி வேகமாசப் போய்க்கொண்டிருந்தது; அது ஒரு காலம். பின்பு மதம்முதலிய மாயைகள், மனமாகிய கப்பலில் பல ஓட்டைகளை ஏற்படுத்தி விட்டன. ஆகவே கப்பல் அமிழ்ந்து போனது இன்று உலகில் சிந்திக்கும் திறம் குறைந்து போனதற்கு இதுதான் காரணம். ஆகவேதான், நான் சொல்கிறேன்; நாம் காணும் உண்மைகளையே நம்புவோம். இரண்டும் இரண்டும்நான்கு. இதைவிட தெளிவானசங்கதிவேறென்றுமில்லை. இத்தகைய தெளிவின் மீதே தத்துவங்கள் ஸ்தாபிக்கப்பட வேண்டும். மனிதனால் நிருபிக்கக் கூடாத எதையும் உண்மையாகக் கொள்ளக் கூடாது. நான் காண்பதும், உணர்வதும்தான் உண்மைகள். எனது கொள்கையெல்லாம் என் கையில் காணும் பத்து விரல்கள் மாதிரி எண்ண எளிதாயும், தெளிவாயும் இருக்கும்படி விரும்புகிறேன். உலகிற்கு அப்பாற்பட்ட உயிர்கள், சாவுக்குப் பின் அமைதி முதலாய வீண் கனவுகள் இனி முடியட்டும். கனிகொடாத மரங்கள் வெட்டிச் சாய்த்தற்குரியன. அதுபோல பயன் படாத மதங்களை ஒழித்து விடுவோம்'' என்று ஆவேசத்தோடு பேசித் தீர்த்தான் லாரி.

“அப்படியானால் மதத்தைப்பற்றி உன் கருத்தென்ன?'' என்று அவனை வினவினேன்.

“நான் ஒரு நாஸ்திகன்''

“அப்படியென்றால்?''

“நான் ஒரு காலத்தில் மடத்திலிருந்தேன் என்பது உண்மையே! தற்பொழுது நான் ஒரு நாஸ்திகன்.''

“நீ மடத்திலிருந்ததைப் பற்றி முன்பே சொன்னாய். இந்த சேசு



குழந்தைகளே! என்னிடம்
வாருங்கள்!
உங்கள் விளையாட்டைப்
பார்க்கப் பார்க்க
என்னைக் கலக்கிய
சங்கைகள் எல்லாம்
மாயமாய் மறைந்து
விடுகின்றன!

குழந்தைகளே என்னிடம்
வாருங்கள்!
உங்கள் ஒளியுலகில்
உலவும்
பறவையும் காற்றும்
பாடுவதை
என் செவியில் கூறுங்கள்!

உங்கள் மெய்தீண்டும்
இன்பம்,
உங்கள் பார்வையின்
ஆனந்தம், இவை எங்கே?
எங்கள் நூல்களின்
ஞானம்,
எங்கள் அறிவின்
சூழ்ச்சிகள் இவை எங்கே?

உங்களைவிட உயர்ந்த
பாடல்கள்
ஒரு காலத்திலும்
பாடப்பட்டதில்லை.
நீங்கள் உயிருள்ள
பாடல்கள்,
ஏனைய எல்லாம்
இறந்தவையே!

—லாங்பெல்லோ.

சபைப் பாதிரிகள் நடத்தும் பள்ளியில் படிக்கும் மாணவர்கள் எல்லோருமே, வால்டேராக, (அதாவது மதத்தில் வெறுப்புற்றவராக) வெளிவருவதில்லையே! நீ சொல்ல வந்ததைத் தெளிவாக சொல்ல வேண்டும்!''

''நான் சொல்ல வேண்டியதையெல்லாம் சொல்லிவிட்டேன். இன்று வரை எல்லா மதங்களும் பூட்டும் சாவியுமாக

லாரி, தொடர்ந்து பேசிக் கொண்டுபோனன், ''தத்துவாதிகள் ''ஐடியா'' என்று சொல்லும் மானஸீகத்தை ஒழிக்க வேண்டும். அவர்கள் கூறும் 'ஐடியா'வும், 'சூப்பர் நாச்சுரலிசம்' என்ற தெய்வீகமுமொன்றே. ஆகவே, தெய்வீகத்தை (கடவுளை) உலகத்தைவிட்டு ஓட்ட வேண்டும். மனிதனிடமிருந்து தெய்வீகம் நாடும் தன்மையைப் பிரிக்க வேண்டும். அமரத்வம்,

    

# மதம் வேறு...

மதம் வேறு, குருக்கள் கட்டுப்பாடு வேறு என்பதை மறக்கலாகாது. அவை ஒன்றுக்கொன்று தீயும் சாம்பலும் போலாம். மதத்தை மீறிக் கட்டுப்பாடு செல்லும்போது நதியை மணல் மூடுவதுபோல் ஆகிறது. அங்கு நீர் கெட்டுப் பாலைவனம் போல் தோன்றும். இந்த நிலையைக் கண்டு மகிழ்ச்சியடைவோர் மிகக் கேடுகெட்டவர்களென்பது வெளிப்படையானாலும் நாமெல்லம் அநேகமாக அதிலேயே மூழ்கிக் கிடக்கிறோம். இதில் மூழ்காத ஜாதியெதுவோ அதுதான் தலைதூக்கும். ஒருவன் மற்றவனைக் கஷ்டப்படுத்தினல் இருவருக்கும் கேடு என்று சமயம் சொல்லுகிறது.

மகள் விதவையாகிப் பட்டினி கிடக்கும்போது இன்ன திதியில் அவளுக்குத் தாகத்திற்கு நீர் கொடுத்தால் பெற்றோர்களுக்குப் பாவமென்று குருக்களின் கட்டுப்பாடு சொல்லுகிறது.

    

காவல் காத்து வரும் சமூகத்தின் சிக்கல்களைக் களைந்தெறிய வேண்டும். மாயை யென்ற சிறையிலிருந்து சமூகத்தை விடுதலைசெய்ய வேண்டும்'' என்றுன் லாரி.

நானும் உன்னைப் பொலவே பகுத்தறிவைப் பாழ்படுத்தும் மாயை, மௌடீகம் இவற்றை ஏற்றுக்கொள்ளவில்லை. இந்தக் கருத்தைப் பொறுத்தவரை நம்மிருவருக்கும் ஒற்றுமையிருக்கிறது. மற்றவற்றில்தான் வேறுபட்டிருக்கிறோம் என்று சொன்னேன்.

நித்யத்வம் என்பதெல்லாம் அர்த்தமற்ற வெறும் கூச்சல். இந்த அடிப்படை உண்மையின் மீதே கல்வித் திட்டங்கள் அமைய வேண்டும். இதுவே என் முடிந்த முடிவு.''

''உன் கருத்துப்படி உலகம் என்றுலென்ன ?'' என்று நான் கேட்டேன்.

''சடப் பொருள்''

''மனிதன் ?''

''அவனும் சுத்த சடப் பொருளே!''

''ஒரு சடப் பொருளுக்கும் மற்

றொரு சடப் பொருளுக்கும் என்ன வித்தியாசம்?''

"இக் கேள்வி அர்த்தமற்றது. எல்லா சடப் பொருளும் சம அந்தஸ்து கொண்டவை. அதுவே சமத்துவத்தின் அடிப்படை''

"இந்திரியங்களென்ருல் என்ன?'' என்று லாரியை வினவினேன்.

"இந்திரியங்கள் என்பது உருவத் தோற்றமே தவிர வேறல்ல. அத் உருவங்கள் சூன்யத்தின் அடையாளங்களே. எல்லாப் பொருளும் அறியப்படாத, உணரப்படாத, அணுவில் அடக்கம். ஒரு அணு மற்றொரு அணுவைவிட உயர்ந்ததென்ருல் அந்த உயர்ந்த அணுவை பரம்பொருள் (கடவுள்) என்று குறிக்க வேண்டும். உண்மையில் அதுமாதிரி நடக்க வழியில்லே. ஆக அணுவெல்லாம் சமம் என்பது தெளிவு. அணுவெல்லாம் சம

    

# கட்டுப்பாடு வேறு!

பச்சாத்தாபத்தாலும் கர்மத்தாலும் ஒருவன் பாவத்தைக் கழுவலாமென்று சமயம் சொல்லுகிறது. கிரகணத்தன்று இன்ன நீரில் முழுகினுல் தன் பாவம் தீருவதுடன் பதினுன்கு தலேமுறை பிதிர்கள் செய்த பாவமும் தீரும் என்று கட்டுப்பாடு சொல்லுகிறது.

சுருங்கக் கூறுமிடத்து சமயம் விடுதலேயைப் போதிக்கிறது. குருக்களின் கட்டுப்பாடு பாவத்தை உண்டுபண்ணி மக்களே அடிமைப்படுத்தி ஆனந்தப்படுகிறது. மதத்தின் பெயரால் பிழைப்பிற்காக ஏற்படுத்திக்கொண்ட சில கிரியைகளுக்கும் பாவனேகளுக்கும் சிறிது பணம் செலவு செய்துவிட்டுத் தனக்கெல்லாம் வந்துவிட்டது, தான் செய்யவேண்டியதெல்லாம் செய்து முடிந்துவிட்டது என்று நினைப்பவர்கள் தங்களிடம் கணக்குக் கேட்கும் காலம் வரும்பொழுது நஷ்டக் கணக்குத்தான் காட்டமுடியுமென்பதை உணரவேண்டும்.

    

தோற்றம் கண்களே மறைக்கும்படியாக ஒரு மேகப் படலத்தை உண்டாக்கி விடுகிறது. அந்த மேகப் படலத்தை பலர் பல பெயரிட்டழைக்கிருர்கள்: அறிவு மனச்சாட்சி, கடவுள், ஆன்மா, என்பன சில பெயர்கள். இவைகளேப்பற்றிய கருத்துக்களே படிப்படியாக ஒழித்துவிடவேண்டும். ஒரு பொருளுக்கும் மற்றொரு சடப் பொருளுக்கும் உயர்வு தாழ்வு கற்பிக்கும் இந்திரியங்களின் கொடுங்கோலாட்சிக்கு முடிவு தேட வேண்டியது! மேலும் மாகவே, அணுவைப் பகுதியாகக் கொண்டிருக்கும் சடப் பொருளெல்லாம் சமம் என்பது கூருமல் விளங்கும்''

லாரி, திறமையுடன் வாதித்துக் கொண்டே போனுன். நான் அவனே உற்றுப் பார்த்துக் கொண்டே போனேன். அப்போது நான் கேட்டேன்:

"உன் கருத்துப்படி, காற்றில் பறக்கும் கொசு, காலில் தைக்கும் முள், நிலத்தில் கிடைக்கும் கல் எல்லாம் ஒன்ருகி விடுமா?''

லாரி, பதில் சொல்லச் சிறிது நேரம் தயங்கினன். பின்பு, "நீர் சொல்வதும் சரிதான்" என்முன்.

நான் சொன்னேன்: "லாரி· தர்க்கத்திற்கும் ஒரு எல்லையுண்டு, அதை அதற்கு மேல் கொண்டு செல்லக்கூடாது. நீ. திறமையாகத் தான் வாதித்தாய். நான் அதைக் குறைத்து மதிப்பிடவில்லை. ஆனல் உன்னை யொன்று கேட்கிறேன். பதில் சொல். உன் கருத்துப்படி பூமியில் மனிதனின் நோக்க மென்ன ?"

"மகிழ்ச்சி!" என்முன் லாரி.

"எனக்குக் கடமைதான் பெரியது. மனிதரெல்லோரும் மகிழ்ச்சியை அனுபவிக்கிருர்கள். ஒருவன் அனுபவிக்கும் மகிழ்ச்சி மற்றெருவன் அனுபவிக்கும் மகிழ்ச்சிக்கு சமமானதா? கூடுதலானதா?" என்று கேட்டேன்.

"சமமானது."

"சரி, தர்க்க ரீதியாக, ஒவ்வொரு காரியத்திற்கும் காரணமுண்டென்பதை ஒத்துக் கொள்கிருயா?"

"அதை யாராவது மறுக்க முடியுமா?" என்று லாரி பதில் கூறினன்.

"ஒரு மனிதனுக்கு ஒரு சந்தர்ப்பம் ஏற்படுகிறதென்று வைத்துக் கொள். அச்சந்தர்ப்பத்தில் ஒருமனிதன். தன் சந்தோஷத்தை மாற்ருனுடைய சந்தோஷத்திற்காக தியாகம் செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. அப்போது இருவர் அனுபவிக்கும் மகிழ்ச்சியும் ஒன்றுக்கொன்று சமமானதா; கூடுதலானதா; குறைவானதா?

"அப்போதும் சமமானதே!"

"தர்க்க ரீதியாக, நாம் அனுபவத்தில் பார்க்கும்போது, ஒரு மனிதன் மற்றவனுக்குத் தியாகம் செய்ய உரிமையுடையவனு?"

"இல்லை" என்முன் லாரி அமைதியுடன்.

"தனி மனிதனுக்குத் தியாகம் செய்ய மனிதனுக்கு என்ன உரிமையிருக்கிறது ?" என்று கேட்டேன்.

இப்படிக் கேட்கவும், லாரி பதில் சொல்ல முடியாமல் அசந்து போனன்.

"நீர் சொல்வது சமூகத்தைப் பற்றியது; அது வேறு விஷயம்" என்று என்னவோ உளறினன்.

இரண்டு நிமிஷம் மௌனம்; பிறகு பேச்சு ஆரம்பித்தது.

"நான் சொல்வதெல்லாம் உண்மையே. உம்மை என்னல் திருப்திப்படுத்த முடியாது; ஆனல் நீர் சொல்வதிலும் சில உண்மைகளிருப்பதை ஒப்புக் கொள்ளுகிறேன்" என்று ஆரம்பித்தான் லாரி.

"ஒன்றும் புதிதாகக் கண்டுபிடித்துச் சொல்லவில்லை. நீ பேசியதை வைத்துக்கொண்டே, படிப்படியாக வாதித்து இந்த முடிவுக்கு வந்தேன். நீ வாதத் திறமை கொண்டவன் என்பதற்குச் சந்தேகமேயில்லை. மனிதன் சடப் பொருள்தான். அவன் சூன்யத்திலிருந்துவந்தவன். மறுபடியும் சூன்யத்திற்கே சென்று சேரவேண்டியவன். ஆனல் மனிதனுக்கு முடிவுற்ற நிலையொன்று உண்டு. அந்நிலையை யடைந்து அதில் நிலைத்திருக்க முயலவேண்டும், உடலுறுதிக்கு மிஞ்சிய ஒழுக்கம் கிடையாது. வாழ்வின் நோக்கம் இன்பானுபவம். வாழ்க்கை வாழ்வதற்கே! இப்படியே படிப்படியாக அடுக்கிக்கொண்டே போகலாம். ஆனல் உன்னைக் கடைசியாக ஒன்று கேட்கிறேன். நீ இதுவரை சொன்னதெல்லாம் உன் கருத்தா அல்லது மற்றவரிடமிருந்து...கடன் வாங்..."

"இல்லை; என் சொந்தக் கருத்துக்களே"

"ஒரு மனிதன் இருப்பதாக வைத்துக் கொள். அவனிடம் இள

மையும் செல்வமும் குவிந்து கிடக்கிறது. அவன் தன்னைப்போலொத்த சடமாகவும் அணுவாகவுமுள்ள வேறு பல மனிதர்களுக்குத் தன் வாழ்க்கையை அர்ப்பணிக்கிருன். உன் அபிப்ராயப்படி அவனை என்னவென்று அழைப்பது?''

"சந்தேகமில்லாமல் முட்டாளென்று'' என்ருன் லாரி.

பேச்சு முடிந்தது. வாய்ச்சண்டை போட்ட விதமாகவே லாரி, விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டான்.

டம் கொடுத்தது. கப்பல் கொஞ்சம் கொஞ்சமாய் கவிழத் தொடங்கியது. கப்பல் மாலுமிகளும், பிரயாணிகளும் நீந்தியும், படகுகள் மூலமாயும் கரை வந்து சேர்ந்தார்கள். லாரியும் தப்பித்துக்கொண்டான்.

இன்னும் கப்பல் கடலுள் அழிந்து போகவில்லை. புயலின் கொடுமையும் ஓயவில்லை. தப்பி வந்தவர்கள் தங்கள் தங்கள் பாட்டைப் பார்த்துக்கொண்டு கதை



பிரஸல்ஸை விட்டு இங்கிலாந்து வழியாக, ஆஸ்திரேலியா போய்ச் சேர்வதற்குக் கப்பலேறினன்.

பல மாதங்கள் கப்பல் பயணம் நடந்தது. கடைசியாகக் கப்பல் ஆஸ்திரேலியாவின் கரைக்குச் சமீபத்தில் வந்து விட்டது. கரையை அடைய இன்னும் சில மைல் தூரமே பாக்கியிருந்தது.

அப்போது திடீரென்று புயல் வீச ஆரம்பித்தது. கப்பல் நிலை கொள்ளாமல் அங்குமிங்கும் ஆட்

பேசி வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தார்கள். எங்கும் ஒரே குழப்பம். கப்பல், அலைகளின் அசைவினல், கடலுள் போவதும், மேலே வருவதுமாக ஆடிக்கொண்டிருந்தது. அக்கப்பலில் மூன்று பெண்கள் தங்கள் உயிருக்காக மன்ருடிக் கொண்டிருந்தார்கள். அவர்களை மீட்டுக் கொண்டு வர யாரும் முன் வரவில்லை. நீச்சல் அனுபவம் மிக்க மாலுமிகளும், கடலில் குதிக்கப் பயப்பட்டார்கள். சுற்றி நின்றவர்

களும் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தார்களே தவிர, யாரும் தங்கள் உயிரைப்பணயம் வைத்துக் கடலில் மூழ்கிக்கொண்டிருக்கும் பெண்களைக் காப்பாற்ற முன் வரவில்லை. எல்லோரும் அப்பெண்களையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டிருந்தார்கள். பெண்கள் கொஞ்சம் கொஞ்சமாக கடலுக்குள் போய்க்கொண்டிருந்தார்கள்.

லாரி, திடீரென்று கடலுள் பாய்ந்தான். அலைகளைக் கிழித்துக் கொண்டு போய் ஒரு பெண்ணை மீட்டு வந்தான். இரண்டாம்முறையும் சென்று மற்றொருத்தியை கஷ்டப்பட்டுக் கரை சேர்த்தான். அதற்குள்ளாக அவனுக்குக் களைப்பு மேலிட்டு விட்டது. உடலெல்லாம் ரத்தம் ஒழுகியது. மூன்றும் முறையும் கடலில் குதித்தான். "போதும்; போதும்; வந்து விடு!" என்று மக்கள் கூக்குரலிட்டார்கள். ஒரே ஒரு பெண்தான் இன்னும் பாக்கியென்று சொல்லிக்கோண்டே முன்னேறினன். எங்கிருந்தோ வந்த ஒரு பெரிய அலை அவனை மோதியது. சிறிது நேரம் லாரி என்னவானன் என்பதே தெரியவில்லை. மக்கள் பார்த்துக்கொண்டேயிருந்தார்கள்.

கடலுள் சென்றவன் கடைசி வரையில் வெளிவரவே இல்லை. மூழ்கியவன் மூழ்கியவனே! அனத்தோல் லாரி இவ்வாறு கடலுக்கு அர்ப்பணமானன். ★

## உரிமை

எல்லா மனிதர்களுக்கும் எந்தக் காலத்திலும் ஒரு உரிமை உண்டு. எந்த விஷயத்தைக் குறித்தும், தனது சொந்த அபிப்பிராயத்தை வெளியிடுவதே இந்த உரிமையாகும். இந்த உரிமையை யாரும் பறித்துவிடக்கூடாது. முக்கியமாக ஜனநாயக ஆட்சிமுறையில் இதற்கு ஆபத்து ஏற்படக்கூடாது. ஆனல், ஒரு விஷயம்; அபிப்பிராயத்தைச் சொல்லுகிறவன் சத்தியத்தை அடிப்படையாகக் கொண்டு, பிரச்சினையை ஆராய்ந்து பார்த்து, முடிவான அபிப்பிராயத்துக்கு வரவேண்டும். மனச்சாட்சியை விற்கக்கூடிய கருத்தாக அவனுடைய அபிப்பிராயம் தோன்றலாகாது. ஜனநாயகமும், சுதந்திரமும் என்றென்றும் நீடித்திருக்க வேண்டுமானல், நாட்டு மக்கள் ஒவ்வொருவரும் இந்தக் கட்டுப்பாட்டை ஒருநாளும் மறக்கலாகாது.

—ஜேம்ஸ் ப்ரைஸ்.

**மறதி!**

கல்லூரி விரிவுரையாளர்களில் பெரும்பாலோர் ஏன் ஞாபக **மறதி**யுடையவர்களாக இருக்கிறார்கள் என்பதை நெடு நாட்களாக ஆராய்ந்து முடிவு கண்டார் ஒருவர். ஆனால் துர்பாக்கிய வசமாக அவர் அதை வெளியிட **மறந்து** போனார்.

**—40ம் பக்கத் தொடர்ச்சி—**

பரிமளா. பிள்ளையை மார்போடு இறுத்து இறுக அணைத்துக் கொண்டு "என்னடி கண்ணு தலை கீழாக எண்ணுகிறாயே?" என்று நடுக்கத்தோடு கேட்டாள் பெற்றெடுத்த மகராசி.

தாயின் பயத்தையும் நடுக்கத்தையும் கண்டு உள்ளத்தில் தானும் வேதனை கொண்ட பரிமளா நோயோடு தான் போராடுவதை மறந்துவிட்டு தாய்க்குப் புரிந்து பேச முற்பட்டுவிட்டாள்.

"அன்னையே, அழாதே. நான் ஒரு பெரிய அதிர்ச்சியால் தாக்குண்டு தவிக்கிறேன். என் தவிப்பை நிறைவேற்ற ஆண்டவனால்கூட முடியாது. அதோ பார் அந்த மரத்தில் பத்தே பத்து இலைகள் இருந்தன. அதில் எட்டு இலைகள் உதிர்ந்துவிட்டன. எஞ்சி இருப்பது இரண்டே இரண்டு இலைகள்தாம். இவையும் விழுந்துவிட்டால் நானும் இறந்துவிடுவேன். அப்புறம் நீ மட்டும்தான். நீ சந்தோஷமாக வாழ்" என்று உள்ளத்தில் அடைபட்டுக்கிடந்த வேதனைகளை வார்த்தைகளாக்கி வெளியே தந்தாள் பரிமளா.

பெற்றெடுத்தவள் மகளின் புதிய போக்கைக் கண்டு பேதலித்துவிட்டாள். அந்தச் சமயத்தில் மற்றொரு இலையும் உதிர்ந்துவிட்டது.

"ஒன்று" என்று உரக்கக் கத்தினாள் பரிமளா. தாய் திரும்பிப் பார்த்தபோது மாமரத்தில் ஒரே ஒரு இலைதான் ஊசலாடிக்கொண்டிருந்தது. "ஐயோ" என்று அலறிவிட்டாள் அன்னைகூட!

"இந்த இலையும் விழுந்துவிட்டால் நானும் இறந்துவிடுவேன். அந்த இலைதான் நான்; நான்தான் அந்த இலை," என்று சொல்லிக்கொண்டே படுக்கையில் சாய்ந்தாள் பரிமளா.

அவளைப் படுக்கையில் நன்கு படுக்கவைத்து விசிறியால் வீசி அயர்ந்து தூங்கும்படி செய்துவிட்ட அன்னை, சன்னல் கதவுகளை இறுக்கமாகக் கெட்டித்துச் சாத்திவிட்டு அறையினின்றும் வெளியே வந்தாள். ஒரு ஆடவன் வாசற்கதவண்டை காத்துக்கொண்டிருந்தான். "யார் நீ" என்றாள் வீட்டுக்குச் சொந்தக்காரி.

"ஒரு அவசர காரியமாக வந்துள்ளேன்" என்றான் வந்தவன்.

கதவைத் திறந்தாள் வீட்டுக்காரி. கையில் இருந்த கடிதத்தை—"என்னை மறந்துவிடுங்கள் – பரிமளா" என்றெழுதி இருந்த பெரிய காகிதத்தைக் கொடுத்து நடப்பு விஷயத்தை விவரமாகக் கூறி தன் பெயர்தான் சொர்ணம் என்று கதையை முடித்தான் வந்தவன்.

விஷயத்தைச் சரிவரப் புரிந்து கொள்ளாத தாயார், மகளின் நோய்க்கு "இவன்தான் காரணமாக இருக்கலாம்" என்பதை மட்டும் அரைகுறையாகப் புரிந்து கொண்டு மகளின் போக்கையும், புத்திக் கோளாறையும் நடப்பையும் வரி வரியாக விவரித்துச் சென்றாள்.

"ஒரே ஒரு இலை. அந்த இலையும் உதிர்ந்துவிட்டால் பரிமளா இறந்து விடுவாள்."

இதை ஆயிரந்தடவை தனக்குள்ளாகச் சொல்லிக்கொண்டான். சொர்ணம்.

உடனே அவசர அவசரமாக வெளியே சென்றான். செல்லும் போது இன்னும் அரைமணி நேரத்துக்குள் அவசியம் வருவதாகச் சொல்லிவிட்டுப் போனான்.

சொர்ணம் திரும்பி வரும்போது ஒரு பெரிய படத்தோடு திரும்பி வந்தான். ஒரு மாமரம். அந்த மாமரத்தில் ஒரு இலை ஊசலாடிக் கொண்டிருந்தது. இதுதான் அந்தப் படம். உண்மையில் அந்த மாமரம் எந்த அளவில் இருந்ததோ அந்த அளவுக்கு இம்மிகூடக் குறையாத அளவில் ஓவிய மாமரமும் இருந்தது. அப்படத்தைச் சன்னலுக்கு வெளியே, மாமரம் இருந்த இடத்தில் உண்மையான மாமரத்தை மறைந்துவிட்டு ஒய்யாரமாகத் தொங்கவிட்டு விட்டு ஓவியன் வெளியேறிவிட்டான்.

தூக்கம் கலைந்த பரிமளா "ஒன்று" என்று கத்திக்கொண்டே சன்னல் வழியாகப் பார்த்தாள். அந்த 'இலை" உதிரவே இல்லை. அன்று முழுதும் மரத்தோடு மரமாக இருந்தது இலை. அதைப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்தாள் பரிமளா.

மறுநாள்......

மறுநாளும் இலை மரத்தோடுதான் இருந்தது. மரத்தைவிட்டு விழவே இல்லை. மனம் மகிழ்ந்த பரிமளா,



நோய் சிறிது தேவலை என்று கூறும் படியாகக் காட்சி அளித்தாள்.

மூன்றும் நாள்....

இலை மரத்தில் இனிமையாக இருந்து வந்தது.

நான்காம் நாள்...

இலை உதிரவே இல்லை, என்றும் போல இருந்தது.

ஐந்தாம் நாள்...

"என்னை எதுவுமே அசைக்க முடியாது" என்பதுபோலக் காட்சி அளித்தது, மரத்தோடு உறவாடிய அந்த மாவிலை.

பரிமளாவின் நோய் பறந்தோடி விட்டது. பெற்றவள் மனம் பூரித்து நின்றாள்.



"அம்மா இனி நான் சாகமாட்டேன். இந்த இலை என்று மரத்திலிருந்து விழவில்லையோ அன்றிலிருந்து நான் பிழைத்துவிட்டேன். இனி நீ சஞ்சலமடைய வேண்டாம்" என்றாள் பரிமளா. "ஆகட்டும்" எனக் கூறி அகமகிழ்ந்தாள் பெற்றெடுத்த தாய். நடமாடும் பக்குவத்தை அடைந்த பிறகு - நல்ல திடகாத்திரம் பெற்றுவிட்ட-தாய், மகளிடம் ஓவியர் வந்துபோன கதையையும் சன்னல் வழியே தெரியும் மாமரத்தின் கதையையும் சொன்னாள். பரிமளா, தாய் சொன்னதை முதலில் நம்பமுடியாமல் தவித்தாள். பின்பு தத்ரூபமாக மாமரத்தையும் உதிராமல் நின்ற இலையையும் பார்த்துவிட்டு ஓவியரின் உள்ளத் தூய்மையை எண்ணி எண்ணி வியந்தாள். தாயின் பேச்சை முழுக்க முழுக்க நம்பினாள்.

"உடலழகு ஒன்றுக்கு உள்ளத்தழகு வேண்டுமடி" என்று தமிழ் வாத்தியாரின் தத்துவ விளக்கத்தின் உண்மைப் பொருள் பரிமளாவின் உள்ளத்தில் பட்டுத் தெறித்தது.

"எங்கே அந்த ஓவியர்"? என்று கத்திக்கொண்டே ஓவியரின் விலாசத்தை எடுத்துக்கொண்டு ஓடினாள் பரிமளா.

ஓவியர் ஒரு படம் வரைந்து கொண்டிருந்தார். அதன் அடியில் "இதுதான் என் இறுதிப்படம்" என்றும் எழுதி இருந்தார்.

அந்தப் படம்......

அந்த படம் பரிமளாவின் படமே யாகும். எவளைப் படம் எழுதிக் கொண்டிருந்தாரோ அவள் அவர் முன்னிலையில் முழு மதிபோல அகமகிழ்வோடு நின்றுகொண்டிருந்தாள்.

அப்புறம்......?

அப்புறம் என்ன? அவர்கள் தம்பதிகளாகிவிட்டனர்! ★




சிந்தாமணி பி.ஏ.

தோற்றம்:—ஆடற்கலையில் வல்லவனான ஆட்டனத்தி சேர மன்னனாக ஆண்டு கொண்டிருந்த நேரம். நெய்தல் நிலத்திலே பிறந்த மருதி, ஆடல் பயில சேர நாடு வந்தாள். கலை ஆர்வம் கொண்ட இருவர் நெஞ்சமும் ஒன்று கலந்தன. காதல் அவர்கள் உள்ளத்திலே உதயமாகியது.

புகார்ச் சோழன் கரிகாலனின் மகள் ஆதிமந்தியும் ஆட்டனத்தியைக் காதலித்தாள். ஆனால் அவள் காதல் 'நிறைவேறுமா?' என்ற கேள்வி எல்லோர் உள்ளத்திலும் எதிரொலித்துக் கொண்டிருந்தது.

உறையூர்ச் சோழன் நல்லிடிக்கோன், மருதியின் உருவும் திருவும் கண்டு அவளை மணக்க விரும்பினான். கரூரிலே நடந்த விழா ஒன்றிலே மருதியின் நாட்டியத்திற்கு ஏற்பாடு செய்தான்.

மருதியை எப்படியாவது மணக்கவேண்டும் என்ற வேகம் உறையூர்ச் சோழனை சதிகாரனாக்கியது. 'மருதி சோழனை காதலிக்கிறாள் ஆகவே, தான் கரூர் விழாவிலே நாட்டியமாடுகிறாள்'' என்ற செய்தியை சேரனுக்கு எட்டும்படிச் செய்தான். விழா முடிந்து திரும்பிய மருதியிடம் தன் எண்ணத்தைக் கூறினான். அவள், ஆட்டனத்திக்கு மட்டுமே தன் உள்ளத்தில் இடம் உண்டு என்று கூறியது கேட்ட சோழன் சினம் கொண்டான்; சேரனுக்கு போர்ச் செய்தி அனுப்பினான். ஆட்டனத்தியை அழித்தொழிப்பேன் என சூளுரைத்தான்.

மருதியின் ஏவலே இத்தனைக்கும் காரணம் என எண்ணினான் சேரன். போர் எனக் கேட்டதும் புலியெனக் கிளம்பி வந்தான் உறையூர் நோக்கி.

செய்தி அறிந்த கரிகாலனின் தாய் மாமனான புலவர் இரும்பிடர்த் தலையார் சோழனிடம் கூறி சேரனுக்குத் துணையாகப் படை அனுப்பினார்.

போரில் நல்லிடிக்கோன் இறந்து பட்டான். புலவரின் முயற்சியால் ஆட்டனத்திக்கும்

ஆதிமந்திக்கும் திருமணம் நடந்தது. மருதியைப் பற்றிய எண்ணம் சேரனின் நெஞ்சை உறுத்திக்கொண்டே இருந்தது.

ஆட்டனத்தியின் திருமணச் செய்தி அறிந்த மருதி, வாழ்நாள் முழுதும் கன்னியாக்வே காலம் கடத்த எண்ணி, கடற்கரையிலே கன்னிமாடம் அமைத்து அங்கே பெருதும்கண்ணீரோடு வாழ்ந்து வந்தாள்.

## காட்சி 1.

[சோழ நாட்டில் புனலாட்டு விழா நடக்கிறது. காவிரிக் கரை பெரியதோர் நகரமாகக் காட்சி தருகிறது. ஆடவரும் பெண்டி ரும் களிமிகுதியால் ஆடிப் பாடிக் கிடக்கின்றனர். காவிரியில் திடீ ரெனப் புது வெள்ளம் வந்து விடுகிறது. எல்லோரும் நீந்திக் கரை ஏறுகின்றனர்.

"ஆட்டனத்தியைக் காண வில்லை" என்ற குரல் எங்கும் எதிரொலிக்கிறது. மருகனைத் தேடி வருமாறு மன்னன் ஆணை யிடுகிறான். "ஆட்டனத்தி கிடைக்கவில்லை" என்ற செய்தி எல்லோருக்கும் பேரிடியாய் இருக்கிறது. பொழுது போய்க் கொண்டிருக்கிறது. அடிவானத் தில் நிலவு தோன்றுகிறது. காவிரிக்கரையிலே அவிழ்ந்த கூந்தலோடு, சோகம் குடி கொண்ட முகத்தோடு, கண் களிலே நீரோட உட்கார்ந்திருக் கிருள் ஆதிமந்தி. சோகத்தால் தன் நிலை இழந்துவிட்ட ஆதி மந்தி பேசுகிருள்.]

**ஆதிமந்தி:** வானத்து முழு நிலவே! நீயும் ஏன் மோனத் தில் ஆழ்ந்து விட்டாய்! நீல வானத்தையும், நீள் வையத் தையும், உன் ஒளி வெள்ளத் தால் தக தகக்க வைக்கிருய்! ஆனல் அந்தோ! காவிரியில் பொங்கி வந்த புது வெள்ளம் என் அத்தானை கொண்டு சென்றதே! புனலோடும் காவிரியே! உன்னைப் பெண் என்று போற்றுகிறது உலகம். நிலமெல்லாம் வளம் கொழிக்க நீர் தந்து மக்கள் உளமெல் லாம் மகிழச் செய்கிருய்! என் கண்கள் குளமாக வேண்டும் என்று எண்ணித்தான் என் அத்தானை எடுத்துச் சென் றனையோ? நீ நேர் வழி நடக்க வேண்டும் என்று என் தந்தை உனக்குக் கரை அமைத்துத் தந்தார்! நீயோ தரை மட்டம் ஆக்கிவிட்டாய் என் வாழ்வை! உன்னைத் தாயாக எண்ணி வாழ்த்தும், வழிபாடும் செய் கிருேம்! நான் உன் சேய் என்றும் பாராமல் கீழான செயல் செய்து என் வாழ் வைப் பாழாக்கி விட்டாய்! காலமெல்லாம் உன் மடியில் களிப்போடு பாடி மகிழலாம் என்று கனவு கண்டுகொண் டிருந்தேன்! அத்தனையும் கன வாகவே நின்று விட்டதே!

[அப்போது ஆதிமந்தியின் தோழி அங்கு வருகிருள்.]

**தோழி:** அம்மா! இருள் சூழ்ந்து எவ்வளவு நேரமாகி விட்டது! உங்களை எங்கெல்லாமோ தேடி அலைந்தேன். அரண் மனைக்குப் போகலாம் அம்மா!

**ஆதி:** உலகைச் சூழும் இருள், இரவியின் வரவு கண்டு மறைந்தோடும்! ஆனல் என் வாழ்வைச் சூழ்ந்து விட்ட சோக இருள் எப்படியடி

நீங்கப் போகிறது! அரண்மனைக்கு அழைக்கிருய்! அங்கே என்ன இருக்கிறது எனக்கு! சிரித்து மகிழ்வூட்டிய என் அத்தானை காவிரி பிரித்து எடுத்துச் சென்றுவிட்டதே! அத்தானைக் காணமல் திரும்பேன். முயற்சியிலே தோற்ருல் செத்து மடிவேன் என்று எல்லோரிடமும் சொல்லிவிடு.

[தள்ளாடியபடியே காவிரிக்கரையோரமாகவே நடந்து செல்கிருள். ஆதிமந்தி போவதையே இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்த தோழி அரண்மனை நோக்கிப் போகிருள்.]

## காட்சி 2

—காவிரி கடலோடு கலக்குமிடம்—நெய்தல் நிலத் தலைவனின் மகள் மருதியும் அவளது தோழிகளும் கடற்கறையிலே, கையில் யாழேந்தி பண் பாடிக் கொண்டிருக்கின்றனர். நிலவின் ஒளியிலே கரைமோதும் கடலலைகள் உருக்கி விடப்பட்ட வெள்ளிக் குழம்பு போல காட்சியளிக்கிறது—

**மருதி:** சண்பகம்! இனம் தெரியாத இன்பம் என் உள்ளத்திலே பொங்கிக் கொண்டிருக்கிறது இன்று! கண்ணீரே கதி என்று எண்ணிக் கிடந்த என் நெஞ்சிலே மகிழ்ச்சி அலை மோதிக் கொண்டிருக்கிறது! ஏன் இப்படி என்று எனக்கே புரியவில்லையே!

[மருதி கூறுவது ஒன்றையும் கவனியாமல், கடலையே உற்றுநோக்கிக் கொண்டிருக்கிருள் சண்பகம்.]

**சண்பகம்:** அம்மா! அதோ பாருங்கள் கடலலையிலே ஓர் உருவம் சிக்கிக் கொண்டிருப்பதை!

[மருதியும் உற்றுநோக்குகிருள். கடலிலே ஓர் உருவம் தென்படுகிறது–காவலர்களை கூவியழைத்து உருவத்தை கரை சேர்க்கும்படி கூறுகிருள்–ஏவலாளர்கள் ஆட்டனத்தியைக் கரையில் கொண்டுவந்து வைக்கின்றனர். மருதி அருகே சென்று பார்க்கிருள். அவள் கண்கள் நீரை வடிக்கின்றன. நெஞ்சு துடிக்கிறது. கன்னி மாடத்திற்கு எடுத்துச் சென்று அவனுக்கு சிகிச்சைகள் அளிக்கப்படுகின்றன. ஆட்டனத்தியின் தலையைத் தன் மடியில் கிடத்திக் கொண்டு.]

**மருதி:** அத்தான்! தாளாத இத் துன்பத்தின் முன்னேடியாகத் தான் இன்பம் என் நெஞ்சில் குமிழியிட்டதோ! ஐயோ! ஆடற்கலைக்கு உயிரளித்த அழகுத்திருமேனி வாடிய மலர் போலாகி விட்டதே! துடிக்கும் கண்கள் இமைப்பை மறந்து விட்டனவே! இந்த கோரக் காட்சியைக் காணத்தான் நான் உயிர் வாழ்ந்தேனு?

[பேசிக்கொண்டே ஆட்டனத்திக்கு சுடுமணலால் ஒத்தடம் கொடுக்கிருள். அப்போது தன்னுணர்வு பெற்ற ஆட்டனத்தி கண்விழித்து மருதியைப் பார்க்கிருன்.]

**ஆட்டனத்தி:** துரோகம் புரிந்த மருதியா? என் இறுதிக் காலத்தை காண எண்ணி சோழனை போருக்கு ஏவிய

மருதியா? நீதான் என்னைக் காப்பாற்றினையா? அப்படியே விட்டிருந்தால் என் சாவிலே உன் எண்ணம் நிறைவேறி இருக்குமே!

[முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொள்கிறுன்.]

மருதி: அத்தான்! தவருன எண்ணம் தங்கள் நெஞ்சிலே தூவப்பட்டுவிட்டது! தூய காதல் கொண்ட பெண்கள் எல்லாம் ஆணினத்தால் புறக் கணிக்கப்பட்டதாகத் தான் கதைகளே கூறுகின்றன! அதற்கு நான் மட்டும் விதி விலக்கல்லவே! கற்ற கலை வீணுகக்கூடாதே என்று கரூர் விழாவிலே ஆடினேன்! சோழன் தன்னை மணந்து கொள்ளுமாறு வேண்டினன். ஆட்டனத்தி ஒருவருக்குத் தான் என் நெஞ்சிலே இடம் என்று கூறிவிட்டேன். போர் நடந்தது! பின் என் நெஞ்சத்தில் குடிகொண்டவர் சோழன் மகளை மஞ்சத்து ராணியாக்கிக்கொண்டார் என்ற சேதி கேட்டு கன்னியாகவே வாழ் நாளெல்லாம் கழிக்க முடிவு செய்தேன். அதோ! பொங்கி வரும் அந்தக் கடலைக் கேளுங்கள்! என் நெஞ்சோடு போட்டியிட முடிந்ததா என்று! புண்ணுகிப்போன என் உள்ளத்து எண்ணத்தையெல்லாம் மண்ணுக்கிவிடாதீர்கள்! விரக்தி நிலையிலே உள்ள என் மனதை சுடுசொல் கொண்டு தாக்காதீர்கள்! என் கண்ணுக்குக் கண்ணுன உங்களை கடலிருந்து தூக்கி வந்த போது என் நெஞ்சம் பட்ட பட்டை யாரறிவார்! உங்கள் பொன்னுன மேனியைய

> ''இரவு, நான் புதிய முறை, உணவு ஒன்றைக் கண்டுபிடித்து ருசி பார்ப்பதாகக் கனவு கண்டு கொண்டிருந்தேன்.''
>
> ''அப்புறம்.''
>
> ''திடீரென்று விழித்துக்கொண்டு பார்த்தால் என் ஜமக்காளத்தில் ஒரு மூலையைக் காணவில்லை.''

தொடும் பாக்கியம் எனக்கு இல்லை என்ருலும், ஆதிமந்தியை துயரக் கடலிலிருந்து காப்பாற்றிவிட்டேன். அதுவே போதும். அன்பே! நான் போகிறேன்!

[வெளியே போக முயற்சிக்கிருள். அவளது கையைப் பிடித்து தடுத்து நிறுத்துகிருன் ஆட்டனத்தி.]

ஆட்டனத்தி: கண்ணே! நீ சோழனை மணக்கப்போகிருய் என்ற செய்தி கேட்டு என் மனம் கொதித்தது. பொருமை, என் சிந்தனையை மூடி மறைந்துவிட்டது. உன்னையும் நிந்தனை செய்து, பசுஞ்சோலையாய் இருக்கவேண்டிய உன் வாழ்வை பாலையாக்கிவிட்டேன்! அன்பே! இனி நான் அவளுக்கு மட்டும் உரியவன் அல்ல! உனக்கும்தான்!

(முகத்தை கையால் திருப்பி) எங்கே! ஒரே ஒரு புன்னகை!

[மருதி பேசாமல் இருக்கிருள்.]

### காட்சி 3.

ஒருநாள் சண்பகம் ஓடிவந்து, யாரோ ஒரு பெண் புழுதி படிந்த மேனியுடனும், முள் தைத்த கால்களோடும் தன்னுணர்வற்ற நிலையில் கிடப்பதாகக் கூறி அழைத்துச் செல்கிருள். மருதி சண்பகத்தின் வீட்டுக்குச் சென்று பார்க்கிருள். ஆதிமந்தி பிதற்றிக் கொண்டிருக்கிருள். மறுநாள் உணர்வு பெற்றதும், மருதி

அவளை விசாரித்து, யார் என அறிந்து கொண்டு ஆட்டனத்தியிடம் அழைத்துப் போகிருள். அவர்கள் இருவரும் பேசிக் கொண்டிருப்பது மருதியின் காதில் விழுகிறது.



நாங்கள் பிரிக்கப்பட்டோம். இப்போது என் உயிரையும், உடலையும் காத்து, உணவும், உடையும் தந்து, உன்னையும் எனக்களித்தாள். இனியும் அவளை துன்பத்திலேயே வைத்திருப்பது முறையல்ல! கண்ணே...

**ஆதிமந்தி:** அன்பே! தங்களை இழந்துவிட்டேனே என்று துடியாய்த் துடித்தேன். மீண்டும் பெற்றுவிட்டேன். காவிரி வாழ்க!

**ஆட்டனத்தி:** கண்ணே! துன்பமே அறியாத நீ என்ன பாடு பட்டாயோ! பஞ்சினும் மெல்லிய உன் பாதங்கள் பழம் போல சிவந்து விட்டதே!

[இருவரும் ஒருவரை ஒருவர் தழுவிக் கொள்கின்றனர்.]

**மருதி:** (தனக்குள்ளே பேசிக் கொள்கிருள்) அவளும் அவரும் உடலும் உயிரும். என்னுல் அவள் வாழ்வு பாழ்படக் கூடாது. தனித்தே இத்தனை நாள் வாழ்ந்தேன்: இனி அவர்கள் வாழ்வுக்காக என்னையே தியாகம் செய்ய வேண்டியது தான்.

[தீர்மானத்தோடு கடற்கரை நோக்கிப் போகிருள்.]

### காட்சி 4

**ஆட்டனத்தி:** ஆதி! மருதி முன்பு என்னை காதலித்தாள். இயற்கை செய்த சதியால்

**ஆதிமந்தி:** அத்தான்! இழந்த என் வாழ்வை எனக்களித்த மருதியை என்னேடு துணை சேர்த்துக் கொள்ள மறுப்பேனு நான்! வாருங்கள் அவளிடமே போய் இந்த இன்பச் சேதியைக் கூறுவோம்.

[இரண்டு பேரும் மருதியைத் தேடிப் போகிருர்கள். கடைசியில் கடற்கரைக்குப் போக அங்கே மருதி பிணமாகிக் கிடக்கிருள். இரண்டு பேரும் கண்ணீர் வடிய அவள் அருகே செல்கின்றனர்.]

**ஆதிமந்தி:** மருதி! இழந்த என் வாழ்வை பெற்றுத் தந்தாய்! எனக்காக என் காதல் வாழ்வுக்காக உன் உயிரையும் தியாகம் செய்து விட்டாய்! இன்பச் சேதி சொல்ல இரண்டு பேரும் ஓடோடி வந்தோமே! பாவி! சாவு உன்னை அணைத்துக் கொண்டதே!

[ஆட்டனத்தி மருதியை மடியில் கிடத்திக்கொண்டு, கண்ணீரோடு, கடலையே பார்த்துக்கொண்டிருக்கிருன். சிறு பொட்டாய்த் தெரிந்த ஒரு படகு மறைந்துகொண்டிருந்தது. கதிரவனும், கடலுக்குள்ளே மூழ்கிக்கொண்டிருந்தான். இருள் லேசாக சூழ்ந்துகொண்டது.] ★

ஆசிரியர்-அச்சிட்டவர்: கண்ணதாசன். அச்சகம்: ஏ. எல். எஸ். அச்சகம். 2-127 மவுண்ட்ரோடு, சென்னை 6.—தமிழ்நாடு.

Wrapper Printed at The Asian Printers, Chepauk, Madras–5